நிகரில்லா தரம்

# பட்டு சேலைகள்

## அணிவகுப்பு

இன்றும், என்றும்...




VISUALS

# சரவணா செல்வரத்னம்

டெக்ஸ்டைல்ஸ்

75, உஸ்மான் ரோடு, ரங்கநாதன் தெரு எதிரில், தி.நகர்

## சினிமா விமர்சனம்



# வெயில்

ஓர் அபூர்வமான விஷயத்தை படத்தின் பெயராக வைத்து எல்லோரையும் படத்தைப் பார்க்க இழுத்திருக்கும் சாமர்த்தியத்தை முதலில் பாராட்டியே தீரவேண்டும். டைட்டில் காண்பிக்கும் போதே, நாம் பார்த்து வெகு நாளான சூர்ய உதயத்தை பளிச்சென பதிவு செய்துள்ள காமிரா கண்ணனுக்கு திருஷ்டி சுற்றிப் போடலாம்.

கதாநாயகன் ஆதித்யாவிற்கு வெயில் வரும்போதெல்லாம் குதூகலமாகிவிடுகின்றது. வெள்ளம் பெருக்கெடுத்தோடும் அண்ணாசாலையில் ஸ்டீம் போட்டில் செல்லும் கதாநாயகன் திடீரென்று லேசாக வெயிலைக் கண்டவுடன் உற்சாகமாகிறான்.

“சப்தமின்றி வந்த வெயிலே - நீ
நிதமும் நித்தம் வந்தாலென்ன”

என்று ஆதித்யா ஆடும்போது, தியேட்டரே சந்தோஷத்தில் ஆடுகிறது. வெயிலில் காய்கிறானே என்று அங்கு ஓடிவரும் கதாநாயகி அவனுக்கு கூலிங் கிளாஸ் கொடுக்கும்போது,

“கூலிங்கிளாஸை குப்பையில் போடு -
ஜாலியாக வெயிலில் பாடு”

என்று அதை உடைத்துப் போடும் போது, வெயிலின் அருமையை டைரக்டர் தெளிவாகக் காட்டியுள்ளார்.

சூரியகாந்தி அவனிடம் போய் “வெயிலுன்னா உனக்கு இஷ்டமா” என்கிறாள்.

“ஆமாம்... வெயில் என் உயிர்த்தோழி” என்கிறான்.

மறுபடியும் எப்போது வெயில் வருகிறதோ அப்போது நம் கல்யாணம் என்று காதலர்கள் உறுதியெடுக்க, கதாநாயகியின் அப்பா வெயில் வராமலிருக்க யாகங்கள் செய்வதும், வானிலை மைய இயக்குநருக்கு காசு கொடுத்து காற்றழுத்தத் தாழ்வு மண்டலத்தை நிரந்தரமாக நிற்க வைத்து சதி செய்வதும் வெகு இயல்பு.

கடைசியில் வெயில் வந்ததா, காதலர்கள் ஒன்று சேர்ந்தார்களா என்ற சஸ்பென்ஸோடு திரைக்கதை முடிகின்றது. எது எப்படியோ திரையில் அடிக்கடி வெயிலைப் பார்த்த திருப்தியோடு தியேட்டரை விட்டு வெளியே வந்தால் கொட்டிக் கொண்டிருக்கும் மழை நமக்கு எரிச்சலூட்டுகிறது.

(விடாமல் பெய்து கொண்டிருக்கும் மழையினால் வெயில் வராதா என்று ஏங்கிக் கொண்டிருந்தபோது பொங்கிவந்த கற்பனை. இதே பெயரில் படம் தயாரித்துக் கொண்டிருக்கும் இயக்குனர் ஷங்கர் மன்னிக்க! ஸ்டில் உதவி: 'அமுதே'!)

- அகிலா கார்த்திகேயன்

# பலன் தருமா புதிய உத்தரவு?

மத்திய அரசாங்கத்தின் கட்டுப்பாட்டில் வரும் சி.பி.எஸ்.ஈ. எனப்படும் மத்திய பள்ளிக்கல்வி வாரியம், அண்மையில் தனது விதிகளில் ஒரு திருத்தம் கொண்டு வந்திருக்கிறது. அதன்படி, குடும்பத்தில் ஒரே குழந்தை, அதுவும் பெண் குழந்தை என்றால், அதற்கு ஆறாம் வகுப்பிலிருந்து பள்ளிக்கூட கட்டணங்களிலிருந்து முற்றிலும் விலக்கு அளிக்கப்படும்.

திடீரென்று இப்படி ஒரு உத்தரவுக்கு என்ன அவசியம்?

"உலகின் பல நாடுகளிலும், ஆண் குழந்தைகள் என்றால் உசத்தி. பெண் குழந்தை என்றால் மட்டம் என்கிற மனப்பான்மையே நிலவி வருகிறது. இந்தியாவிலும் இந்த நிலைதான்.

பெண் குழந்தைகளுக்கு கல்வி அறிவு முக்கியம் என்று கருதி, மத்திய அரசு இப்படி ஒரு முடிவை எடுத்திருக்கிறது. இதன்படி ஒரே குழந்தை, அதுவும் பெண் குழந்தை என்றால், அதற்கு பள்ளிக்கூடத்தின் சகல கட்டணங்களிலும் விலக்கு அளிக்கப்படும். இரண்டு பெண் குழந்தைகள் மட்டுமே உள்ள குடும்பம் என்றால், இரண்டு குழந்தைகளுக்கும் 50% கட்டணச் சலுகை தரப்படும்" என்று அறிவிக்கப்பட்டிருப்பதாக சி.பி.எஸ்.ஈ. தரப்பில் சொல்கிறார்கள். இந்த உத்தரவு அடுத்த கல்வி ஆண்டிலிருந்து அமலுக்கு வருகிறது. இதனைக் கடைப்பிடிக்காத பள்ளிக் கூடங்களின் அங்கீகாரம் ரத்து செய்யப்படும் என்றும் தெரிகிறது.

"இது வரவேற்கத்தக்க விஷயம். பெண் குழந்தை என்றால் இரண்டாம் பட்சமாக நினைக்கிற மனோபாவத்தைப் போக்கும் முயற்சியாக, இதனைக் கொண்டு வந்திருப்பதை நான் பாராட்டுகிறேன். இதனை சி.பி.எஸ்.ஈ. பள்ளிகளுக்கு மட்டுமில்லாமல், மெட்ரிகுலேஷன் மற்றும்



• ரேஷ்மி



• பாலசுப்ரமணியன்



இதர பிரிவுகளில் உள்ள பள்ளிக் கூடங்களிலும் அமல்படுத்த வேண்டும்'' என்று கூறுகிறார் வங்கியில் பணிபுரியும் பாலசுப்ரமணியன். இவரது மனைவி தனியார் துறையில் பணிபுரிகிறார். இவர்களின் ஒரே மகள் அம்ருதா, ஆறாம் வகுப்பு மாணவி.

"இந்த உத்தரவால் பெரிய பலன் ஒன்றும் இல்லை" என்பது ஷ்யாமாவின் கருத்து. இவர் பத்தாண்டுகளாக பெண் சிசுக்கொலை பற்றி ஆராய்ச்சி செய்து வருகிறார்.

"சி.பி.எஸ்.ஈ. பள்ளிகள் நகரப் புறங்களில் மட்டுமே உள்ளன. இங்கே வசதியான குடும்பத்தைச் சேர்ந்த குழந்தைகளும், பணி மாற்றத்துக்குரிய அரசு அதிகாரிகளின் குழந்தைகளும்தான் அதிகமாகப் படிக்கிறார்கள். இந்த உத்தரவால், கிராமப் புறங்களில் என்ன பலன் கிடைக்கும்? இன்று தமிழக கிராமப்புறங்களில் பள்ளி மாணவிகளுக்கு வழங்கப் படும் இலவச சைக்கிளில், கம்பீரமாய் மாணவிகள் பள்ளிக் கூடம் போய் வருவதைப் பார்க்கவே பெருமையாக உள்ளது. அது அவர்களது தன்னம்பிக்கையை அதிகரித்துள்ளது. இது போன்ற திட்டங்களை அறிமுகப்படுத்தலாம்" என்கிறார் ஷ்யாமா.



* ஷ்யாமா

"இதற்கு மாறாக, ஒவ்வொரு வகுப்பிலும் பொருளாதார ரீதியில் வசதியில்லாத ஒரு மாணவிக்குக் கட்டணச் சலுகை அளிக்கலாம்" என்று கருத்துக் கூறுகிறார் பத்மா சேஷாத்ரி பள்ளியின் ரேஷ்மி ஒய்.ஜி.பார்த்தசாரதி. "ஆணும், பெண்ணும் சமம் என்று சொல்லிக் கொண்டு இது போன்ற விதிகளைக் கொண்டு வருவதை பையன்களுக்கு எதிரானது என்று சிலர் குற்றம் சாட்டுவார்கள்" என்றும் இவர் சுட்டிக் காட்டுகிறார்.

"பெண் குழந்தைகளுக்கு நல்லது செய்யும் நோக்கத்துடன் இந்த உத்தரவு பிறப்பிக்கப்பட்டுள்ளது. ஆனால், வருமானம் போகிறதே என்ற நோக்கத்தில் சில பள்ளிகள் ஒற்றைப் பெண் குழந்தைகளுக்கு அட்மிஷன் தருவதையே தவிர்க்க முயற்சிப்பார்கள். அல்லது 'கட்டணம் கிடையாதில்லையா. நன்கொடை கொடு' என்று பணம் பறிக்கும் முயற்சியில் இறங்கலாம். அரசாங்கம் கண்காணித்து, உரிய நடவடிக்கை எடுக்க வேண்டும்" என்று எச்சரிக்கிறார் பாலசுப்ரமணியன்.

- எஸ்.சந்திரமௌலி




# கல்கி

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில்
அச்சிட்டு வெளியிடுபவர் :
கி. ராஜேந்திரன்

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் :
சீதா ரவி

ஆசிரியர் குழு :
அனுராதா சேகர்
ஆர்.சி. ஜெயந்தன்
மு.மாறன்

வடிவமைப்பு :
எஸ். ஸ்டீஃபன்
பி.ஆர். ராஜன்

தொலைபேசி :
2225 1522, 2225 0623,
2225 1324

தொலைநகல் :
044 - 22251021

மின்னஞ்சல் :
ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com
சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம்
உள்நாடு :
ஒரு வருடம் : ரூ.390/-
ஆறு மாதம் : ரூ.195/-
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 63.50யு.எஸ். டாலர்
இலங்கை : ரூ.2060/-

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.

ஒவ்வொரு இதழும் உங்கள் பேழைக்கு

**பா**துகாவலர்கள் இல்லை! பந்தா இல்லை! அம்மாவின் கையைப் பிடித்துக் கொண்டு அதிரடியாகத் தைரிய ஷாப்பிங் செய்கிற கதாநாயகியைப் பார்த்திருக்கிறீர்களா? கூட்டம் நெட்டித்தள்ளும் ஸ்பென்ஸர் பிளாசாவில் அங்கங்கே ஆட்டோகிராஃப் போட்டபடி உலா வந்து கொண்டிருந்தவரை அருகில் பார்த்ததும் ஷாக்! ப்ரியாமணி! முகத்தில் துளி மேக்-அப் இல்லை. "என்னங்க! இப்படி ஒப்புக்குக்கூட ஒப்பனை இல்லாமல் வெளியே வர்றீங்க? ரசிகர்கள் வெறுத்துட மாட்டாங்களா?"னு கேட்டதும் 'க்ளுக்' என்று சிரித்து விட்டார்.

"சரியா கேட்டீங்க ஒரு கேள்வி! நான் மேக்-அப் போட்டுக் கொண்டு வெளியே வந்தால் ரசிகர்களுக்கு என்னை அடையாளம் தெரியுமாங்கிறதுதான் இப்போ கேள்வியே!"

" 'அது ஒரு கனா காலம்' படத்துக்கு பாலு சார் கூப்பிட்டு 'படத்துல உனக்கு சுத்தமா மேக்-அப் கிடையாதும்மா; ஓகேவா?'ன்னு கேட்டார். சார்...ன்னு இழுத்தேன். 'அவசரப்படாதேம்மா... ஒரு ஆயிரம் அடி ஷூட் பண்ணி ரஷ் போட்டுக் காட்டுறேன்... அப்புறம் பார்'ன்னார்...' என்னாலே எதுவும் சொல்ல முடியலே... ரஷ் பார்த்து நாம தானா இதுன்னு ஒரே ஷாக்... அவ்ளோ அழகா இருந்தேன்..." என்று கண்ணடித்த ப்ரியா மணி,



'பருத்திவீரன்', 'தோட்டா' ஆகிய படங்களில் பிஸி.

"தேனிக்குப் பக்கத்தில் ஒரு கிராமத்துலே நடந்த உண்மைக் கதைதான் பருத்திவீரன். ரொம்ப வீரமான கிராமத்துப் பெண்ணா நடிக்கிறேன். இதனாலே... கிராமத்துலே போய் வாழ்ற மாதிரி ஒரு உணர்வு வந்துருச்சு..." என்ற ப்ரியா மணியிடம், "உங்கள் வீட்டிலும் வருமானவரித்துறை ரெய்டு என்று கேள்விப்பட்டோமே" என்று கிளறினோம். ஆனால் உஷாராகப்

பதில் வந்தது.

"அம்மா ஒரு வங்கி அதிகாரி. ரொம்ப சின்சியரா வரி கட்டிடுவாங்க. ரெய்டுக்கு வந்த அதிகாரிங்க ரெக்கார்ட் பார்த்துட்டு ஜிப்-இட் அப் சொல்லிட்டுப் போனாங்க" என்றவரிடம், பாரதி "ராஜாவின் அறிமுகம் என்று தைரியமாகச் சொல்லிக் கொள்ள முடியவில்லை தானே" என்றோம்.

"என்ன இப்படிச் சொல்லிட்டீங்க! 'கண்களால் கைது செய்' தோல்விப் படமாக இருந்தாலும் எனக்கு சூப்பர் லாஞ்ச்தான். பாரதிராஜா பெயரைக் கெடுத்துடாம நல்ல நடிகைன்னு பேர் வாங்கணும்... ரொம்ப வெயிட்டான ரோலா? ப்ரியாமணிகிட்டே நம்பி கொடுக்கலாம்னு சொல்லணும்... அவ்வளவுதான் சார்... இதுக்குமேலே பேராசையெல்லாம் கிடையாது."



# ப்ரியாவின் பேராசை!

சின்ன ஆசைதான்! நிறைவேறட்டும் அம்மணி!

சந்திப்பு : ஸ்ரீ

# புக் சாட்












"என்ன ஸ்ரேயா, தீபாவளிக்கு என்னென்ன படங்கள் பார்த்த?" என்றபடி வந்தான் வஸந்த்.

"நான் ஒரு படமும் பார்க்கலப்பா... அந்த காசுக்கு ரெண்டு தீபாவளி மலர் வாங்கி முழுக்கப் படிச்சிட்டேன்!"

"அப்படியா? ஆச்சர்யமா இருக்கே. நீ சினிமா பைத்தியம்னுல்ல நெனச்சிருந்தேன்..."

"நினைப்பே நினைப்பே... வேணும்னா கலைமகள், அமுதசுரபி தீபாவளி மலர்கள் மேல நான் பைத்தியமாய்ட்டேன்னு சொல்லலாம்..."

"அவ்ளோ சூப்பரா இருக்கா?"

"நிச்சயமா... பாரம்பரியமிக்க தயாரிப்புன்னு நிரூபிச்சிருக்காங்க. அமுதசுரபில படைப்புகள் பக்கத்துல, எழுத்தாளர்கள் பத்தின குறிப்புகளையும் போட்டோவோட வெளியிட்டு பல பேரை வெளிச்சத்துக்குக் கொண்டு வந்திருக்கறது பாராட்டும்படியா இருக்கு. கலைமகள்ல திறந்ததுமே இருக்குற பதினாறு கணபதி படங்கள் கண்ணுக்கு நிறைவா இருக்கு. ரெண்டுலயுமே அருமையான சிறுகதைகள், அட்டகாசமான பேட்டிகள், ரசிக்கற மாதிரி கட்டுரைகள்னு ஏகப்பட்டதை அள்ளிவிட்டிருக்காங்க. மரபு, புதுசுன்னு கவிதைகளும் அங்கங்கே கண் சிமிட்டுது".

"அது சரி, என்னை மாதிரி யங்ஸ்டர்ஸுக்கு என்ன இருக்கு இந்த மலர்கள்ல?"

"கலைமகள்ல நடிகர் விஜய் பேட்டி, மியூசிக் டைரக்டர் பரத்வாஜ் பேட்டியெல்லாம் போட்டு கலர்ஃபுல்லா கலக்கியிருக்காங்க. அமுதசுரபிலயோ இளைய தலைமுறையினரோட படைப்புகள்தான் பக்கத்துக்குப் பக்கம். என்னையே கேள்வி கேக்குறியே... நீ ஏதாச்சும் தீபாவளி மலர் படிச்சியா?"

"ம்.. மஞ்சரி படிச்சேன். கைக்கு அடக்கமான சின்ன சைஸ் புக். சாபுசிரில் பேட்டி, குறும்படக் கட்டுரை, மூஸிவோட காமெடி ஸ்கிட், ஏ.எம்.ஆர். அகோபில அனுபவம், விண்வெளி சாதனைகள், வெளியீட்டு விழாக்கள் பத்தின கட்டுரை, இந்திரா சௌந்தர்ராஜனோட ஜோதிட விளக்கம்னு ஏகப்பட்ட சூப்பர் மேட்டர்ஸ் இருக்கு. விலை ரொம்பக் கம்மிதான் முப்பத்தஞ்சு ரூபா."

"கலைமகளும் அமுதசுரபியும் எண்பது ரூபா. ஆனா கொடுக்குற காசுக்குக் கூடுதலாவே விஷயங்கள் இருக்கு. ஆமா நம்ம கல்கி தீபாவளி மலர் படிச்சியா...."

"எங்கப்பா, செம டிமாண்டாம். வந்த வேகத்துல வித்துத் தீர்ந்துடுச்சாம். புக்கே கிடைக்கல. என் ஃப்ரெண்ட் வீட்ல வாங்கியிருக்காங்க. அதான் படிக்க இரவல் வாங்கிட்டு வரலாம்னு போறேன்..."

"அப்படின்னா இரு நானும் வர்றேன்!"

# “அப்பளத்துக்கு அடிச்சுப்பேன்!”



“ஹைய்யா... என்னோட சீரியல் 9.30 ஸ்லாட்டுக்கு வந்துடுச்சு... இனிமே என்னோட குட்டீஸ் ரசிகர்களோட எண்ணிக்கை கும்மா ‘ஜிவ்’வுன்னு ஏறப்போகுது”- என்று குஷி மூடில் குதிக்கிறார் சாய் ராகேஷ். ‘கிருஷ்ணா காட்டேஜ்’ காமெடி சீரியலில் ‘சாம்’ஆக வந்து கலாட்டா செய்யும் இவர் கிட்டத்தட்ட ஜெயா டீ.வியின் ஆஸ்தான காம்பியரர்.

“எங்க கிருஷ்ணா காட்டேஜ் யூனிட் பார்க்கறதுக்கு காமெடி சீரியல் யூனிட் மாதிரியே இருக்காது. ஒருத்தருக்கொருத்தர் அடிச்சுக்கிட்டு, கிள்ளிக்கிட்டு, செம கலாட்டா பண்ணிட்டு இருப்போம். அதுலயும் நாங்க சாப்பிடறப்போ அப்பளத்துக்கு அடிச்சுக்குவோம் பாருங்க... ப்பா... சான்ஸே இல்ல” என்று சிரிக்கும் சாய் ராகேஷ், ஜெயா டீ.வியில் வரும் ‘காலேஜ் கொண்டாட்டம்’ நிகழ்ச்சியில் கல்லூரிப் பெண்களைக் கலாய்ப்பதில் கில்லாடி. அதே சேனலில் ‘டேக்-5’ நிகழ்ச்சியில் இவர் அடிக்கும் கூத்துக்கு செம வரவேற்பாம்.

“ஆளு ரொம்ப சுமாரா இருக்கீங்களே... நிச்சயமா சினிமா சான்ஸ் வந்திருக்குமே...” என்றால்,

“ஹைய்யோ... எப்படி சார் கண்டுபிடிச்சீங்க? ஆக்சுவலா ‘பாய்ஸ்’ல எனக்கு வந்த வாய்ப்பு ஜஸ்ட் மிஸ்ட். இருந்தாலும், அதன் பிறகு இப்போ ஐந்து படங்கள்ல சான்ஸ் கிடைச்சுருக்கு. இப்போ ‘இதுதான் காதல் என்பதா’ படம் ரிலீஸாகப் போகுது” என்று சிலிர்க்கும் சாய் ராகேஷுக்கு டீஸ் பண்ணி ஃப்ரெண்ட் பிடிப்பது ரொம்பப் பிடித்தமான ஹாபியாம்.

- முராரி

# உதிரிக்கட்சிகளின் உட்டாலக்கடி!

தமிழகத்தில் கிட்டத்தட்ட கொசுக் களின் எண்ணிக்கைக்குக் கொஞ்சமும் சளைக்காத அளவிற்கு இருப்பவை அரசியல் கட்சிகளே. அவற்றில் பெரும்பாலானவை சாதிக் கட்சிகளும் குட்டிக் குட்டி லெட்டர்பேடு கட்சிகளும்தான். இவை சிறியன வாக இருந்தாலும்கூட, பிற கட்சிகளுடன் இணைந்து அவற்றின் வெற்றி-தோல்வி வாய்ப்புகளைப் பாதிக்க வாய்ப்பு உண்டு.

சட்டமன்றத் தேர்தல் வெகு அண்மையில் கண் சிமிட்டிக் கொண்டிருக்கும் நிலையில், இந்தக் கட்சிகள் எந்த நிலைப்பாட்டை எடுக்கப்போகின்றன என்பது குறித்து அந்தந்த கட்சித் தலைவர்கள் மற்றும் முக்கியப் பிரமுகர்கள் பலரிடம் பேசினோம்.

விடுதலை சிறுத்தைகள் சென்ற தேர்தலில் தி.மு.க கூட்டணியில் இருந்து, அதன் சின்னத்திலேயே எட்டுத் தொகுதிகளில் போட்டியிட்டது. திருமாவளவன் மட்டும் ஒரு தொகுதியில் வென்று, பின்னர் ராஜினாமா செய்து விட்டார். அவர் தி.மு.க. கூட்டணியின் முக்கிய அங்கமான பா.ம.கவுடன் தமிழ்ப் போர்வையில் இணைந்து தனி ஆவர்த்தனம் செய்வதை தி.மு.கவினர் ஆரம்பத்திலிருந்தே ரசிக்கவில்லை. ஆனால் டாக்டர் ராமதாஸோ, திருமாவளவனை தி.மு.க. கூட்டணிக்குள் கொண்டுவர பகீரதப் பிரயத்தனம் செய்து வருகிறார். இதன் மூலம் தனக்கு வடமாவட்டங்களில் கணிசமான பலன் கிட்டும் என்பது ராமதாஸின் கணக்கு. ஆனால் ராஜினாமாவுக்குப் பிறகு திருமாவளவனின் பேச்சுகள், அவர் கட்சியின் சார்பாக கலைஞரை எதிர்த்து ஒட்டப்பட்ட போஸ்டர்கள், தி.மு.கவினர் மத்தியில் ஆறாத வடுவை ஏற்படுத்திவிட்டது. ஒருவேளை தி.மு.க. திருமாவளவனை ஏற்றுக் கொண்டாலும் முன்பு பா.ம.கவுக்கும் வாழப்பாடியார் கட்சிக்கும் சீட் ஒதுக்கிய அதே பாணியில் குறைந்தது முப்பது இடங்கள் ஒதுக்கப்படும் என்றும், அதிலிருந்து கணிசமான தொகுதிகளை பா.ம.க வேண்டுமானால் திருமாவளவனுக்குத் தரட்டும் என தி.மு.க. தரப்பில் சொல்வதாகத் தெரிகிறது.

எதுவும் ஒத்து வராத பட்சத்தில் சிறுத்தை தோட்டத்தில் தஞ்சமடையலாம்.?



• தமிழரசன்



• சேதுராமன்

புதிய தமிழகம் சென்ற தேர்தலில் தி.மு.க. கூட்டணியில் பத்துத் தொகுதிகளில் போட்டியிட்டு அனைத்திலும் தோல்வியடைந்தது. பின்னர், மக்கள் கூட்டணியில் இணைந்து இக்கட்சி தற்பொழுது தனித்தே இருக்கிறது. தி.மு.க ஆட்சியில் இருந்த பொழுது கிருஷ்ணசாமி மீது போடப்பட்ட வழக்கில் அவருக்கு ஆதரவாகத் தீர்ப்பு வெளியானவுடன் கலைஞரை எதிர்த்து ஒட்டப்பட்ட போஸ்டரைத்தவிர, தி.மு.கவுக்கு புதிய தமிழகத்தை கூட்டணிக்குள் சேர்த்துக் கொள்வதில் எவ்வித நெருடலும் இல்லை. அதே சமயம் தி.மு.க கூட்டணிக்குள் ஏற்கெனவே நிறைய கட்சிகள் இருப்பதால் தென் மாவட்டங்களில் தலித்துகளின் கணிசமான வாக்கு வங்கியைக் கொண்டுள்ள தனக்கு, உரிய இடங்கள் கிடைக்காது என்று கிருஷ்ணசாமி நினைத்தால், அ.தி.மு.க பக்கமும் சாயலாம். (அந்த அணியில் மட்டும் சீட்டுகளை அள்ளித் தந்துவிடுவார்களா?)

அடுத்து ராஜகண்ணப்பனின் மக்கள் தமிழ் தேசம். யாதவர்களின் வாக்குவங்கியைக் கொண்டுள்ள இக்கட்சி சென்ற சட்டமன்றத் தேர்தலில் தி.மு.க.கூட்டணியில் ஏழு

இடங்களில் போட்டியிட்டு அனைத்திலும் தோல்வியடைந்தது. பின்னர் அதிலிருந்து வெளியேறி மக்கள் கூட்டணியில் இணைந்து, சமீபத்தில் மீண்டும் தி.மு.க. கூட்டணியில் இணைந்து விட்டது.

"தென் மாவட்டங்களில் எழுபது தொகுதிகளில் ஒரு தொகுதிக்குப் பதினைந்தாயிரம் வாக்குகளும் வடமாவட்டங்களில் அறுபது தொகுதிகளில் ஒரு தொகுதிக்குப் பத்தாயிரம் வாக்குகளும் எங்களுக்கென்று உள்ளது. எங்களுடைய வாக்கு வங்கி எதற்கும் விலை போகாத வாக்குவங்கி. ஆகவே சென்ற தேர்தலைப் போன்றே இந்த முறையும் உரிய மரியாதை தரப்படும் என்று நம்புகிறோம். எங்களுக்கு எண்ணிக்கை முக்கியமல்ல, கூட்டணித் தலைமை எங்களை எப்படி நடத்துகிறது என்பதுதான் முக்கியம். எங்களுடைய பலத்தையும் தேவையையும் கூட்டணியில் உள்ள அனைத்துக் கட்சிகளும் உணர்ந்துள்ளன. ஆகவே எத்தனை இடங்கள் என்பதை கலைஞரே முடிவு செய்வார்" என்கிறார் மக்கள் தமிழ் தேசத்தின் தலைவர் ராஜ கண்ணப்பன். தனது சொந்தத் தொகுதியான இளையான்குடி கண்ணப்பனுக்கு ஒதுக்கப்பட்டதால் தி.மு.கவிலிருந்து வெளியேறிய தமிழ்க்குடிமகன், தற்போது மறைந்து விட்டதால் ராஜகண்ணப்பனுக்கு பிரச்னையின்றி இளையான்குடி ஒதுக்கப்படும் என்பது அக்கட்சியினரின் எதிர்பார்ப்பு.



• டி.ஆர்.

• ஏ.சி. சண்முகம்



• ராஜகண்ணப்பன்

• ஆர்.எம்.வீ

தற்பொழுது தி.மு.க. கூட்டணியில் இருக்கும் டாக்டர் சேதுராமனின் அகில இந்திய மூவேந்தர் முன்னணிக் கழகம் சென்ற சட்டமன்றத் தேர்தலின் போது திருமங்கலம் தொகுதியில் போட்டியிட்டுத் தோற்றது. ''கலைஞருடன் இருந்த பல கட்சிகள் வெளியே சென்று விட்டு மீண்டும் திரும்பியிருக்கும் நிலையில், கடந்த நான்கு தேர்தல்களிலும் நாங்கள் தி.மு.க. கூட்டணியிலேயே இருக்கிறோம். கலைஞரைப் பொறுத்தமட்டில் கூட்டணிக் கட்சிகளைத் திருப்தி செய்வது மிகவும் சிரமமான காரியம்தான். இருந்தாலும் எங்களுக்கு நிச்சயம் தொகுதிகள் ஒதுக்குவார். ஒருவேளை இதயத்தில் மட்டும் தான் இடம், என்றாலும் கூட, திரும்பத்திரும்பப் போய் அவரிடம் தொகுதி கேட்பேனே ஒழிய ஜெயலலிதா பக்கம் போகமாட்டேன். தமிழக ஆட்சியிலிருந்து ஜெயலலிதா விரட்டப்பட வேண்டும் என்பதிலேயே நாங்கள் உறுதியாக இருக்கிறோம். ஜெயலலிதாவால் அதிகம் பாதிக்கப்பட்டது எங்கள் கட்சிதான். ஆகவே எந்தச் சூழ்நிலையிலும் நாங்கள் அ.தி.மு.க. பக்கம் போகமாட்டோம்'' என்கிறார் உறுதியாக. இந்தத் தேர்தலிலும் திருமங்கலம் தொகுதியே ஒதுக்கப்பட்டால் நிம்மதி என்ற நினைப்பில் இருக்கிறது இக்கட்சி.

ஏ.சி. சண்முகம் தலைமையிலான புதிய நீதிக்கட்சியின் பார்வையோ வேறுமாதிரியாக இருக்கிறது. "சென்ற தேர்தலில் நாங்கள்தான் மூன்றாவது அணி அமைக்க முயற்சியெடுத்தோம். ஆனால் இந்தமுறை அப்படியொரு நிலையை எடுக்க மாட்டோம். இப்போது ஃபார்வர்டு வகுப்பில் வரும் முதலியார், வேளாளர் போன்றோரை

பிற்படுத்தப்பட்ட வகுப்பிற்குக் கொண்டுவர வேண்டும். அதே போல பிற்படுத்தப்பட்டோர் பட்டியலில் வரும் துளுவவேளாளர், அகமுடையார்கள், பிள்ளைமார்கள் உள்ளிட்டோரை மிகவும் பிற்படுத்தப்பட்ட வகுப்பிற்கு மாற்றவேண்டும். இந்தக் கோரிக்கைகளை அ.தி.மு.க. அரசு அனைவருக்கும் உடனடியாக அமுல்படுத்த முடியாவிட்டாலும் கூட, வறுமைக்கோட்டுக்குக் கீழ் உள்ளவர்களுக்காக மட்டுமாவது அமுல்படுத்தவேண்டும். அல்லது சாதிப் பட்டியலை பொருளாதார ரீதியில் மாற்றியமைக்க வேண்டும். அதாவது, நல்ல வசதி படைத்தவர்களை ஃபார்வர்டு வகுப்பிலும், ஓரளவிற்கு மிதமான வசதி படைத்தவர்களை பிற்படுத்தப்பட்ட வகுப்பிலும், வறுமைக் கோட்டிற்குக் கீழ் உள்ளவர்களை மிகவும் பிற்படுத்தப்பட்ட வகுப்பிலும் சேர்க்க வேண்டும். இதற்கு அ.தி.மு.க. அரசு உடனடியாக செவி சாய்த்து நடைமுறைக்குக் கொண்டு வந்தால் புதிய நீதிக்கட்சி தேர்தலில் போட்டியிடாது. மாறாக, அ.தி.மு.கவுக்குத் தனது நிபந்தனையற்ற ஆதரவைத் தரும். ஒருவேளை அ.தி.மு.க. அரசு இதைச் செய்யாத பட்சத்தில் நாங்கள் தேர்தலில் போட்டியிடுவோம். எந்தக் கூட்டணி என்பதை எங்கள் பொதுக்குழு கூடி முடிவெடுக்கும். குறைந்த சீட் வாங்கிக் கொண்டு தேர்தலில் போட்டியிடுவதைவிட, எங்கள் சமுதாயத்திற்குப் பலன் தரும் வகையில் தான் நாங்கள் மேற்கண்ட முடிவெடுத்திருக்கிறோம்" என்கிறார் ஏ.சி. சண்முகம்.

ஜெகத்ரட்சகனின் ஜனநாயக முன்னேற்றக் கழகமும் இந்தத் தேர்தலில் களம் காண உள்ளது. பா.ம.கவின் பாணியிலேயே தனது கட்சியையும் நடத்தி வரும் ஜெகத்ரட்சகனுக்கு பா.ம.க. இருக்கும் அணியில் இடம் பிடிப்பதற்கு வாய்ப்பே இல்லை. இக்கட்சியின் நிலைப்பாடு பா.ம.கவைப் பொறுத்தே இருக்கிறது. இக்கட்சியினர், பா.ம.க - தி.மு.க. கூட்டணியில் இருந்து வெளியேறுவது தங்களுக்கு நல்லது என்று நினைக்கின்றனர்.

செ.கு.தமிழரசனின் இந்தியக் குடியரசுக் கட்சி அ.தி.மு.கவுக்கே விசுவாசமாக உள்ளது. "இந்த ஆட்சி அடித்தள மக்களுக்காகத் தொடர்ந்து பல திட்டங்களைச் செயல்படுத்திவருகிறது. ஆகவே, இந்தத் தேர்தலிலும் நாங்கள் அ.தி.மு.க. கூட்டணியிலேயே இருக்கிறோம். எத்தனை இடங்கள் என்பதெல்லாம் தேர்தல் நேரத்தில் பேசித் தீர்த்துக் கொள்ள வேண்டிய விஷயம். இப்போதே அதற்கு அவசரம் காட்டமாட்டோம். அரசியல் சூழ்நிலை, கொள்கை முடிவுகள், தோழமை உணர்வு ஆகியவற்றின் அடிப்படையில் நாங்கள் அ.தி.மு.கவுடன் கூட்டணியில் இருக்கிறோமே தவிர, இடம் அதிகம் கிடைக்கும் என்பதற்காக இந்தக் கூட்டணியில் நாங்கள் இல்லை" என்கிறார் செ.கு.தமிழரசன்.


• ஜெகத்ரட்சகன்


• கிருஷ்ணசாமி


• திருமாவளவன்

அம்மாவுக்கு ஆதரவு தருவதையே தனது இலட்சியமாகக் கொண்டு கட்சி துவங்கியிருக்கும் விஜய டி.ராஜேந்தரின் அனைத்திந்திய இலட்சிய திராவிட முன்னேற்றக் கழகத்துக்கு, பூங்கா நகரையோ அல்லது மயிலாடுதுறையையோ கொடுத்துவிட்டு, மாநிலம் முழுவதும் பிரசாரத்திற்குப் பயன்படுத்தத் திட்டமிட்டுள்ளது அ.தி.மு.க.

சென்ற தேர்தலில் ஆலந்தூர் தொகுதியில் போட்டியிட்டுத் தோற்ற எம்.ஜி.ஆர். கழகத்தின் ஆர்.எம்.வீரப்பனுக்கு இந்தமுறை கலைஞரின் இதயத்தில் மட்டுமே இடம் கிடைக்க வாய்ப்பிருக்கிறது.

ஃபார்வர்டு பிளாக், பொன்.குமார் கட்சி ஆகியன இந்த முறையும் அ.தி.மு.க. ஆதரவு நிலையையே எடுக்கும் எனத் தெரிகிறது. இந்திய யூனியன் முஸ்லிம் லீக் தற்பொழுது தி.மு.க. அணியில் உள்ளது.

தேர்தல் நெருங்க நெருங்க, சீட்டுப் பிடிக்கும் ஆசையில் குட்டிக்கட்சிகள் தங்களது நிலைப்பாட்டை மாற்றி உட்டாலக்கடி வேலைகளைச் செய்யுமா? அல்லது கொள்கை(!) உறுதியில், இருக்கின்ற இடத்திலேயே செட்டிலாகிவிடுமா என்பது அவர்களுக்கே புரியாத புதிர்தான்.

- இரா. முத்துக்குமார்

படங்கள்: ராஜன்

# காணக் கிடைக்காத கலை மலர்!

✉ கல்கி தீபாவளி மலர் 2005-ஐ படித்தேன். காஞ்சி, திருவானைக்கா, திருவண்ணாமலை, திருக்காளத்தி, சிதம்பரம் போன்ற பஞ்சபூத ஸ்தலங்களின் பக்தி மணம் கமழ்ந்தது.

**நங்கநல்லூர்,** **எம். பவானி**

✉ கண்ணுக்கு - வண்ணங்களின் நேர்த்தி
சித்திரங்களின் அழகு
கருத்துக்கு - கவிதைகளின் ஆழம்
கட்டுரைகளின் வளம்
உவகைக்கு - நகைச்சுவை சிரிப்பு
கதைகளின் சிறப்பு
ஆன்மாவுக்கு - இலக்கிய நயம்
இறையுணர்வு மணம்

**சேலம்,** **இ. கிருபா**

✉ தமிழ் வாசகப் பரப்பில் நுட்பமான, தெளிவான வாசகர்களைக் குறிவைத்து வெளியிட்டிருக்கும் இம்மலர் தனித்த இடத்தைப் பெறும். மலருக்காக உழைத்த அத்தனை உள்ளங்களுக்கும் என் நெஞ்சார்ந்த பாராட்டும் வாழ்த்தும்.

**நெய்வேலி,** **பாரதி பாலன்**

✉ கம்பீரமான கலைப் படைப்பு என்றால் எப்போதுமே அது கல்கி தீபாவளி மலர்தான். அட்டைப் படத்திலிருந்து அனைத்துப் பக்கங்களும், தன்னிகரற்ற தரத்தில் மிளிர்கின்றன. தனுஸுவின் தெய்வீக திருஉருவ வண்ணமடல்களும் இந்த வருட கல்கி தீபாவளிமலரின் சிறப்பைப் பன்மடங்கு உயர்த்தி விட்டன. சிதாரவியின் 'அபங்கம்' அழகான இலக்கியப் படைப்பு. எம்.எஸ். வாழ்க்கைச் சித்திரமடல், காணக்கிடைக்காத கலைமலர்!

**மயிலாடுதுறை,** **சின்னஞ்சிறுகோபு**

✉ கல்கி தீபாவளி மலர் படித்து, ரசித்து, மகிழ்ந்து எழுதுகிறேன். அட்டையில் எழில்மிகு நெல்லை காந்தியம்மன், உள்ளே (எம்)பெ(ரு)ம்மான் பற்றி சுப்ர.பாலனின் விளக்கம், படித்த போது வாழ்க்கையின் 'வேதா'ந்தம் புரிந்தது.

**வியாசர்காலனி,** **சிம்மவாஹினி**



# வலையோரம்



## பூனை புண்ணாக்கு திங்குமா?

**புலி:**

இது விடுதலைப்புலிகளின் தளம் அல்ல... விடுதலையாய் காட்டில் வாழும் புலி (பூனை) வகையைப் பற்றிக் கூறும் தளம் (www.bigcatrescue.org)

புலி, பூனை, சிறுத்தை, சிங்கம் போன்ற விலங்குகளைப் பற்றிய என்சைக்ளோபீடியா இந்தத் தளம். கனடாவில் ஒரு புலி கர்ப்பமாகியுள்ளது; சைனாவில் ஒரு காட்டுப்பூனைக்கு ஜலதோஷம் என்ற வகையில் செய்திகள் அப்டேட் ஆகின்றன. வால்பேப்பர், வீடியோ, கேம்ஸ் இவற்றோடு ஒவ்வொரு விலங்கும் எப்படிச் சப்தம் எழுப்புமென சவுண்ட் பைல்களையும் தந்துள்ளார்கள். புலி, பூனை எல்லாம் ஒய்யாரமாக போஸ் கொடுத்தபடி நிற்கும் காலண்டர்கள் கிடைக்கின்றன. புலி புல்லைத் திங்குமா... பூனை புண்ணாக்கைத் திங்குமா? இப்படிச் சந்தேகங்களைப் போக்கிக் கொள்ளப் பயப்படாம இங்க போங்க! இன்னும் எக்கச்சக்க தகவல்கள் புலி போல் பதுங்கிக் கிடக்கின்றன... மியாவ்!

**டௌன்லோட்:**

நம்ம சிஸ்டத்தில ஏகப்பட்ட எழுத்துருக்களை (Fonts) வெச்சிருப்போம். இல்லேன்னா இந்த எழுத்துரு நம்மகிட்ட இருக்கா, இல்லையான்னு தேடுவோம். நம்ம சிஸ்டத்துல இருக்கிற எழுத்துருக்களை ஈஸியா பார்க்குற மாதிரி, மேனேஜ் பண்ணுற மாதிரி இருந்தா ரொம்ப உதவியா இருக்கும்ல... அதுக்கு உதவுற அப்ளிகேஷன் ஹாரிஸான் பாண்ட் வியூவர் (இலவசமாகக் கிடைக்குமிடம்: horizon5.co.uk/html/fontpage.htm) இந்த அப்ளிகேஷன் எழுத்துருக்களை விதவிதமான அளவுகளில், வண்ணங்களில், பார்மட்ல ஈஸியா பார்க்க உதவுது. புதிய எழுத்துருக்களை இன்ஸ்டால் பண்ணுற, அன்-இன்ஸ்டால் பண்ணுற வேலையைச் சுலபமாக்குது. 512Kல் ஒரு நல்ல அப்ளிகேஷன்!

**வலைப்பதிவு:**

ஒரு வித்தியாசமான செல்வந்தர் இருந்தார். தன்னிடம் உதவி கேட்டு வருவோர்கள் தன்னுடைய துன்பங்களைச் சொல்லும்போது பொறுமையாகக் கேட்டுக் கொள்வார். கடைசியாகத் தன் ஆழ்ந்த அனுதாபத்தையும் இரக்கத்தையும் மட்டும் தெரிவித்து எந்த உதவியும் செய்யாமல் அனுப்பி விடுவார். இப் பழக்கம் அந்தச் செல்வந்தரின் வாடிக்கை! நம்மிடம் இந்தக் குணம் சிறிதாயினும் இருக்கும். நம்மிடம கேட்கப்படும் உதவியை நம்மால் செய்ய இயலும். இருப்பினும் இரக்கப்படுதலோடு உதவியை மறுத்தோ அல்லது தேவையைவிடச் சற்றுக் குறைத்தோ கொடுக்கும் சூழ்நிலை வரும். இதற்கு ஒரு அளவுகோல் ஒன்றை வகுக்கலாம். நாம் செய்யும் உதவி முழுமையாக இருந்தால் (100%), இரந்தவரிடம் இன்முகத்தைத் தோற்றுவிக்கும் (100%). மாறாக இரக்கம் (பரிதாபம்) மட்டுமே கொண்டால் (0% ஈகை) இரந்தவரிடம் இன்முகம் காண முடியுமா?

'இன்னாது இரக்கப் படுதல் - இரந்தவர்
இன்முகம் காணும் அளவு'

(valluvam.blogspot.com - வலைப்பதிவிலிருந்து)

**- வலைஞன்**



அட!

## நட்வர் சிங் நாடகம்!

“எந்த விசாரணையைக் கண்டும் நான் அஞ்சவில்லை...” என்று வீர வசனம் பேசியிருக்கிறார் நட்வர் சிங். பதவியில் ஒட்டிக் கொண்டு, அதற்குரிய அதிகாரங்களையும் பெற்றுள்ள நிலையில் வீரப்பிரகடனங்கள் செய்வதற்கு எவ்வித துணிச்சலும் தேவை யில்லை; பதவி விலகி, கட்சியின் கௌரவத்தையும் சுயகௌரவத்தை யும் காப்பதுதான் மெய்யான வீரம். அத்தகைய வீரம் இன்று இந்தியாவில் எந்த அரசியல்வாதியிடம் இருக்கிறது!

நட்வர் சிங் பேரில் சுமத்தப்பட்டுள்ள குற்றச்சாட்டு சாமானிய மானதல்ல... ஈராக், குவைத் மீது போர் தொடுத்தபோது, அந்த பாதகத்தைக் கண்டிக்கும் விதமாக ஈராக்மீது பொருளாதாரத் தடைகளை விதித்தது ஐ.நா. சபை. ஈராக்கில் உணவு உற்பத்தி மிகக் குறைவு என்பதால், இத் தடைகளின் விளைவாக அங்கு உணவுப் பற்றாக்குறை ஏற்பட்டது. மனிதாபிமான நோக்கில் ஐ.நா. சபை, ஈராக்கிடமிருந்து எண்ணெயைப் பெற்றுக் கொண்டு அதற்கு ஈடாக உணவுப் பண்டங்களை மட்டும் பிற நாடுகள் வழங்க அனுமதி தந்தது. இந்தப் பரிவர்த்தனை ஐ.நா. சபையின் மேற்பார்வையில் தான் நடைபெற்றது என்றபோதும் ஈராக்குக்கு உதவ பல ஐ.நா. அதிகாரிகளே லஞ்சம் பெற்றனர்! அவர்கள் வழிகாட்ட, உலகெங்கும் பல நாடுகளைச் சேர்ந்த நிறுவனங்கள் ஈராக்கிடம் எண்ணெய்




கல்கி



2005 நவம்பர் 20
பார்த்திப கார்த்திகை 5
மலர் : 64
இதழ் : 16


தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.




பெற்றுக் கொண்டு உணவுப் பண்டங்களை ஏற்றுமதி செய்தனர். இந்த பேரத்தின்போது லஞ்ச - லாவண்யத்தில் ஈடுபட்டனர். கோடிக்கணக்கான டாலர்கள் இந்த ஊழலில் விளையாடியிருக்கிறது.

இந்தியாவைப் பொறுத்தவரை, டாடா, கிர்லோஸ்கர், ரிலயன்ஸ் போன்ற முதன்மை தொழில் நிறுவனங்கள் இப்படி கமிஷன் வாங்கிக் கொண்டதாகவும் காங்கிரஸ் கட்சியும் நட்வர் சிங்கும்கூட ஈராக்கிடம் கமிஷன் பெற்றதாகவும் குற்றம் சுமத்தப்பட்டிருக்கிறது.

இந்தக் குற்றச்சாட்டுகளுக்கு உரிய ஆதாயம் இருக்கிறது என்கிறது, இவ்வூழலை ஆராய அமர்த்தப்பட்டுள்ள வோல்கர் கமிட்டி. குற்றம் சாட்டப்பட்ட யார்தான் குற்றத்தை ஒப்புக் கொள்வார்கள்? சர்வதேச சந்தையில் இவ்வாறு கமிஷன் பெறுவதும் தருவதும் வெகு சகஜம் என உதறித் தள்ளுகின்றன வலிமைமிக்க இந்திய வர்த்தக நிறுவனங்கள்! அவை இவ்வாறு கூறுவதே ஒரு வகை ஒப்புதல் வாக்குமூலம்தானே!

நட்வர் சிங்கையோ காங்கிரஸையோ காரணமின்றிக் குற்றம்சாட்டி அவமானப் படுத்துவதில் வோல்கர் கமிட்டிக்கு என்ன லாபம் அல்லது மகிழ்ச்சி இருக்க முடியும் என்பது சிந்திக்கத்தக்கது. நட்வர் சிங் இன்று அமைச்சராக உள்ளார் என்பது தெரியாமலே இந்தக் குற்றச்சாட்டு வெளியிடப்பட்டிருக்கிறது என்பதுகூட வோல்கர் கமிட்டியின் நடுநிலைமைக்கு ஓர் எடுத்துக்காட்டுதான்.

உலகளவில் கவனம் பெறும் ஓர் ஆய்வுக் கமிட்டி, உரிய சான்றுகள் இல்லாமல் இவ்வளவு பெரிய குற்றச்சாட்டைச் சுமத்தத் துணியுமா என்பதையும் சிந்திக்க வேண்டும்.

இவற்றையெல்லாம் எடைபோட்டுப் பார்க்கையில், இந்த வோல்கர் புகைச்சல் ஆரம்பித்தபோதே நட்வர்சிங் ராஜினாமா செய்து, தமது கௌரவத்தையும் காங்கிரஸின் கௌரவத்தையும் காப்பாற்றிக் கொண்டிருக்க வேண்டும். நிரபராதி என்று நிரூபணமான பிறகு, மறுபடி அமைச்சரவைக்கு அழைக்கப்பட்டால் வருவதாகச் சொல்லியிருக்கலாம்.




ஆனால் நட்வர் சிங் ராஜினாமா செய்யவில்லை. காங்கிரஸ் கட்சியும் சம்பந்தப் பட்டிருப்பதால் பிரதமரும் கண்டுகொள்ளவில்லை. எதிர்கட்சிகள் பலமாகக் குரல் எழுப்பிய பிறகே அரை மனத்துடன் நட்வர் சிங்கிடமிருந்து அயல் விவகாரத் துறையை மட்டும் பறித்து, இலாகா இல்லாத அமைச்சராக நீடிக்க அனுமதித்துள்ளார். இதன் மூலம் தமது பலவீனத்தையே வெளிப்படுத்துகிறார் பிரதமர்.

ஒரு புறம், குற்றச்சாட்டை ஆராய நடுநிலையாளரான நீதிபதி பாதக் அமர்த்தப்படுகிறார். மறுபுறம், அதற்கு ஒரு நாள் முன்னதாகவே வீரேந்திர தயால் என்ற உயர் அதிகாரி, குற்றச்சாட்டுத் தொடர்பான தகவல்களைக் கண்டறியவும் ஆராயவும் பிரதமரால் நியமிக்கப்படுகிறார். அதிகாரியைத் தேர்ந்தெடுக்கும் உரிமையை நீதிபதிக்கே பிரதமர் விட்டுக் கொடுத்திருக்கலாம். அப்படிச் செய்யாததால் சந்தேகங்களுக்கு இடமளித்தவ ராகிறார் பிரதமர். போதாக் குறைக்கு இன்னும் ஒரு படி மேலே போய், பீஹாரில் தேர்தல் பிரசாரத்தின்போது, "நட்வர் சிங் நிரபராதி; அவர் பேரிலான குற்றச்சாட்டுகளுக்குச் சான்றுகளே இல்லை" என்று தீர்ப்பே கூறுகிறார்! இவரே தீர்ப்பு வழங்குவதானால் பாதக்கின் நியமனம் எதற்கு?

குற்றவாளி என நிரூபிக்கப்படும் வரை ஒருவர் குற்றமற்றவர் என்பது நீதித் துறைக்கு ஏற்றதுதான். ஆனால், அரசியலில் 'ஸீஸரின் மனைவியும் சந்தேகத்துக்கப்பாற்பட்டவராக இருக்க வேண்டும்' என்ற வசனம் முக்கியமானது. நட்வர் சிங்கின் மகன், அவரது நண்பர் போன்றோர் மீதும் இந்த பேரம் தொடர்பான குற்றச்சாட்டுகள் எழுந்துள்ளன.

நீதிமன்றத்தில் ஒரு வழக்கு இழுத்தடிக்கப்பட்டால் அது தனிமனிதர்களைத்தான் பாதிக்கும். முக்கியமான அரசியல் தலைவர்கள் மீது சுமத்தப்படும் குற்றம் அரசியலையே பாதிக்கும்; நாட்டின் எதிர்காலத்தையே நிர்ணயிக்கும். எனவே, வோல்கர் கமிட்டியின் குற்றச்சாட்டை ஆராய அமர்த்தப்பட்டுள்ள நீதிபதி பாதக், தமது பணியைத் திறம்படவும் வெகு துரிதமாகவும் முடிக்க வேண்டும். ●







'இளம்பிறை கவிதைகள்' தேனாக இனிக்க... அனந்த பத்மநாபனின் ஓவியம் பெருமை சேர்த்தது.
வில்லிவாக்கம், குமரேசன்

'எந்தக் கட்சியாவது கூப்பிட்டால் பிரசாரத்துக்குப் போவீங்களா?' என்ற கேள்விக்கு நயன்தாராவின் பதில் டூ மச்!
மதுரை, என்.பாலகிருஷ்ணன்

'அரசு ஊழியர் மாநாடு ஒத்திவைப்பு' கட்டுரை அரசு ஊழியர் சங்கங்களுக்குடையே ஒருமித்த கருத்து இல்லை என்பதைத்தான் தெரிவிக்கிறது.
சென்னை, கே.வி.ராமன்

2015 வரை போக வேண்டுமா என்ன? இப்பவே அந்த லட்சணத்தில் தான் இருக்கிறது தமிழ் சினிமா.
கடம்பத்தூர், என்.அண்ணாதுரை

அணை கடந்த வெள்ளம் அழுதாலும் திரும்பாது. கதவணைகளைக் கட்டி, கொள்ளை போகும் காவிரி நீரைக் காத்துகொண்டால் அதுவே பேருதவி.
கிழவனேரி, செ.சத்தியசீலன்

கொள்ளைபோகும் வெள்ள நீர். சரியான தருணத்தில் வெளியிடப்பட்ட மிகச் சரியான கட்டுரை. அரசு கவனிக்குமா?
லோயர் அணைக்கட்டு, பி.இராஜேந்திரன்

## வாசகர் வேண்டுகோள்!

அரசு ஒய்வூதியம் பெருவோரின் பென்ஷன் தொகையில் 'பென்ஷனர் ஹெல்த் பண்ட்' என ஒரு தொகை மாதந்தோறும் உடல் நல காப்பீட்டுத் தொகையாக பிடித்தம் செய்யப்படுகிறது. சில தினங்களுக்கு முன் கேன்சர் நோயால் தாக்கப்பட்டேன். உதவி கோரி அணுகியபோது இத்திட்டத்தின் மூலம் பென்ஷன்தாரருக்கு மட்டுமே பணம் திருப்பித் தரப்படும் என்றும் மனைவிக்குக் கிடையாது என்பதையும் அறிந்து வருந்தினோம்.

பெண்கள் மேம்பாட்டிற்காக பேருதவிகள் செய்து வரும் மாண்புமிகு முதலமைச்சர், பென்ஷன்தாரர்களின் பெரும் சுமையைப் போக்கும் விதமாக மனைவிக்கும் பலனளிக்க ஆவனச் செய்யுமாறு தாழ்வன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.
சென்னை, கே.ஹேமமாலினி

சுராத்தேவைப் போட்டுத் தாக்கிய பரமுவுக்கு ஜாக்கிசான் ஸ்டைலில் பாராட்டு.
சென்னை, எஸ்.ஆர்.ஹரிஹரன்

எம்.எஸ். பற்றி 'கடம்' வினாயகராம் சொல்லியிருந்ததைப் படித்து உள்ளம் உருகினேன்.
வியாசர்பாடி, சிம்மவாஹினி

# இப்பவே அந்த லட்சணம்தான்!

வட்டமேஜை

# வராய் தொகுப்பாளினி!

**தொலைக்காட்சியைத் திருகும் அனைவருக்கும், தொகுப்பாளினிகள் அன்றாடம் நிகழ்த்தும் 'டமில்' படுகொலை அத்துப்படி. இவர்களை எப்படித்தான் மாற்றுவது? சில உருப்படியான யோசனைகள்.**

- 'என்னோட மதர் டங் தமிழ்' என்று சொல்பவர்களையும் 'என்னோட மதர் டங் தமில்' என்று சொல்பவர்களையும் நிராகரித்து விடலாம். முதற் கட்டமாக தமில் என்று சொல்பவரைத் தனியாக அழைத்து 'டமில்' என்று முட்டிக்குக் கீழே சுட்டால்கூட பாதகமில்லை.

- "ஆன் த வேயில் லாரி மோதிச்சி" என்று பேசுபவர்களைத் தமிழ் தெரிந்தவராக ஏற்றுக்கொள்ள முடியாது. அதேபோல் 'வரும் வலியில் லாரி மோதிட்டார்' என்று இலக்கண சுத்தமாகப் பேசுபவர்களையும் தேவையில்லாமல் லாரிக்கு 'அவர்' 'இவர்' என்று மரியாதை கொடுப்பவர்களையும் ஸ்டூடியோ பக்கமே நெருங்கவிடக் கூடாது.



- பல் முளைக்காத குழந்தைகள் மட்டும்தான் மழலையில் பேசலாம். சல்வார் கமிஸ், ஜீன்ஸ் எல்லாம் போட்டுக்கொண்டு மழலை பேசக்கூடாது.

- 'ஸ்டுடியோவுக்கு வந்துசேர்ந்தவுடன், மேக்-அப் போடுவதற்கு முன்னால் தினமும் 'அ' ஃபார் அம்மா, 'இ' ஃபார் 'இலை' என்று சப்தம் போட்டுச் சொல்ல வேண்டும். 'க,ங,ச,ஞ' தவறில்லாமல், அடிமாறாமல் ஒப்பிக்க வேண்டும். 'யாரு சுட்ட தோசை, அம்மா சுட்ட தோசை' 'பத்துக்காசு விலையிலே பலூன் ஒன்று வாங்கினேன்' போன்ற பாப்பா பாடல்களை இரண்டு நாளுக்கு

''மேடம், நீங்க எதுக்காக அமெரிக்கா போக விரும்புறீங்க?''

''என் பக்கத்து வீட்டுக்காரி டெல்லி போயிட்டு வந்து ரொம்பவே அலட்டிக்கிறா, அவ வாயை மூட வைக்கணும்''

- கே.என்.சுப்ரமணியன்



ஒருமுறை, பதினைந்து முறை ஒப்பிக்க வேண்டும்.

● 'நீங்க எப்படி இருக்கீங்க?' 'என்ன வேலை செய்யறீங்க?' 'எவ்வளோ சம்பளம் வாங்கறீங்க?' 'என்ன சமையல் செஞ்சிருக்கீங்க?' 'எப்போ கடைசியா நகம் வெட்டினீங்க?' 'டெய்லி பல் தேய்ப்பீங்களா? 'குரோட்டன்ஸுக்கு தண்ணி ஊத்தினீங்களா?' 'பால் பாக்கெட்டை பிரிட்ஜ்ல வெச்சுட்டீங்களா?' போன்ற கேள்விகள் சமுதாய முன்னேற்றத்துக்கு அவசியமில்லாதவை. இதில் ஏதேனும் ஒரு கேள்வியை நேயரிடம் கேட்டால் கூட, 'நீங்களே போய் நேர்ல பார்த்துட்டு வாங்க' என்று சொல்லி அவரை ரயில் ஏற்றி சம்பந்தப்பட்ட நேயரின் வீட்டுக்கு அனுப்பி விடவேண்டும். திரும்பவும் ஸ்டூடியோவுக்குள் சேர்த்துக்கொள்ளக் கூடாது.

● பேசும்பொழுது சிரிக்கக்கூடாது. சிரிக்கும்பொழுது பேசக்கூடாது. இரண்டும் வெவ்வேறு செயல்கள். குறிப்பாகத் திடீர் திடீரென்று 'குபீர் குபீர்' என்று பேய் படத்தில் வருவது போல் சிரிக்கக் கூடாது.

● 'முந்தா நாள் நீங்கள் தொகுத்தளித்த நிகழ்ச்சி பற்றி இருபது நிமிடங்கள் சிரிக்காமல் பேசவும்' என்று கூறி அவர்கள் பேசுவதை ஒரு அடி ஸ்கேல் வைத்துக்கொண்டு அருகிலிருந்து கவனிக்க வேண்டும்.

● 'நான் சரவணன் பேசறேன்' என்று நேயர் கூறினால். 'வாவ், நீங்கள் சரவணனா பேசறது?' என்று கேட்கக் கூடாது. 'நான் உசிலம்பட்டியிலிருந்து கூப்பிடறேன்' என்றால் 'ஓ, மை காட். உசிலம்பட்டியிலிருந்தா கூப்பிடறீங்க?' என்று ஏதோ ஜார்ஜ் புஷ் வெள்ளை மாளிகையிலிருந்து கூப்பிடுவதைப் போல் ஓவர் பில்ட் - அப் கொடுக்கக் கூடாது.

● எதற்கெடுத்தாலும் 'ச்சோ ச்வீட்' என்று சொல்லக் கூடாது. கை, கால்களை வலிப்பு வந்தது போல ஆட்டக் கூடாது.

● மூக்கு சுவாசிப்பதற்கு மட்டுமே. அதன் வழியாக வார்த்தைகள் வெளிப்பட்டால் புரிந்து கொள்வது சிரமம்.

● ஸ்டார் மூவிஸ் கதாநாயகிகள் போல் 'ஹே' 'ஹோ' 'ஓ மை காட்' 'யா' 'யூ கைஸ்' 'ஹலவ் கேர்ள்ஸ்' 'இட்ஸ் ஓகே யா' 'கமான் ஃபோல்க்ஸ்' என்று கண்டமேனிக்கு உதட்டைக் சுழித்துப் பேசக்கூடாது. ஸ்டார் மூவிஸ் வேறு. தமிழ் தொலைக்காட்சி வேறு. இன்னமும் சிலர் டார்ஜான், ஜுராசிக் பார்க் சப்தங்களை அடிக்கடி வெளிப்படுத்துகிறார்கள். இப்படியெல்லாம் செய்து குழந்தைகளை பயமுறுத்தக் கூடாது என நிபந்தனைகள் விதிக்க வேண்டும்.

● உடைந்த ஆங்கிலம் பேசுவது உயிர்க்கொலை செய்வதற்குச் சமானம். 'க்ராக்கர்ஸ் க்ராக் பன்னியாச்சா?' 'பிரேக்ஃபாஸ்ட் ஈட் பன்னியாச்சா?' 'நியூ ட்ரெஸ் பை பன்னீங்களா?' என்று பேசினால் வெள்ளைக்காரர்களின் கண்களில் 'ப்ளட் பபிள்ஸ்' விடும். அதாவது ரத்தம் கொப்பளிக்கும்!

- **மருதன்**




வாசகர்களின் எண்ணிக்கை
அதிகரித்த
ஒரே தமிழ் நாளிதழ்
தினமணி
செய்தியில் முழுமை; சொல்வதில் புதுமை!
அதிக வாசகர்கள்
படித்த
இணைப்புகள்
இளைஞர்மணி,
வெள்ளிமணி
Source: NRS 2005

• எம்.எஸ். பாடலுக்கு பார்த்தசாரதி மிருதங்கம்



**எம்**.எஸ்ஸின் டைரியில் நாள் தவறாது என் பெயர் இடம் பெறும் என்று என் வாழ்க்கையில் எந்தக் கட்டத்திலும் நான் நினைத்துப் பார்த்ததில்லை. இன்று, அவர் மறைவுக்குப் பின், அவர் அண்மையில் நான் அனுபவித்த மேன்மைகளை அசை போடுகிற தருணத்தில்தான் அந்தப் பாக்கியம் எனக்குக் கிடைத்திருப்பதை உணர்கிறேன்.

இருபதாண்டு காலத்துக்கு, சென்னையில் இருந்த தினங்களில் எல்லாம் அதிகாலை அவருக்கு இன்ஸுலின் இஞ்செக்ஷன் போடுவது என் பொறுப்பாக இருந்தது. ஏழோ, ஏழரையோ,

# குழந்தை மனம்; தெய்வ குணம்!

எட்டோ எத்தனை மணிக்கு நான் சென்றாலும் குளித்து விட்டுத் தயாராகக் காத்திருப்பார். ஒருநாளும் என்னை அவர் காக்க வைத்ததில்லை! முதலில் நாடித்துடிப்பை 'செக்' பண்ண வேண்டும்; அடுத்து BP செக் பண்ண வேண்டும்; மூன்றாவதாக ஸ்டெத் வைத்துப் பார்த்து நெஞ்சுக்கூடு பரிசோதனை... அதன் பிறகுதான் இன்சுலின் ஊசி... இந்த வரிசை ஒருநாள் கூட மாறக் கூடாது என்பதில் குழந்தைபோல் ரொம்ப ரொம்ப கவனமாக இருப்பார். எந்த கையில் அன்று ஊசி போட வேண்டும் (இரு கைகளிலும் மாற்றி மாற்றிப் போடுவது வழக்கம்) என்பதை நான் மறந்தாலும் அவர் மறந்ததேயில்லை. அன்றன்றைக்கு 'பல்ஸ் ரேட்', 'B.P' விவரங்களைத் தமது டைரியில் குறிக்கும்போதுதான், சேகர் வந்தான்...' என்று ஆரம்பித்து என் பெயரையும் (வீட்டுப் பெயர் சேகர்) அவற்றோடு சேர்த்து குஞ்சக்கா தமது டைரியில் எழுதுவார்!

'குஞ்சக்கா' என்று உரிமையோடு அழைக்கும் உறவுப் பிணைப்பு என் தாயார் மங்களம் மூலம் உண்டாயிற்று. சதாசிவம் மாமாவின் சகோதரி மகள் என் தாயார். சிறு வயதிலேயே தந்தையை இழந்த என்னையும் என் சகோதரர்களையும் ஆதரித்து ஆளாக்கியவர்கள் இந்த தெய்வீக தம்பதிதான். நான் மணிப்பால் மருத்துவக் கல்லூரியில் படித்து டாக்டரானதே அவர்களுடைய ஆதரவில்தான்.

ஆனால் குஞ்சக்கா என்னை ஏதோ விஐபி டாக்டர் போலத்தான் பிறருக்கு அறிமுகப்படுத்துவார்! தாம் நன்றாக இருப்பதும் பாடிக் கொண்டிருப்பதும் என்னால்தான் என்பது போல் போகிற வருகிற



எங்கள் எம்.எஸ்.

# டாக்டர் பார்த்தசாரதி



வர்களிடமெல்லாம் சொல்லிக் கொண்டிருப்பார்! உண்மையில் டாக்டர் சி.வி.கே போன்ற மூத்த டாக்டர்கள்தான் அவருக்குச் சிகிச்சை அளித்துக்கொண்டிருந்தனர்; அவர்களுடைய அறிவுரைகளை நிறைவேற்றுவதே என் பணி! குஞ்சக்காவின் அற்புதக் குரலையும் தெய்வீக அழகையும் சிருஷ்டித்த கடவுள்தான் அவருடைய உடல் நலத்தை காத்துவந்தார் என்றுதான் சொல்ல வேண்டும். இல்லாவிட்டால், இத்தனை சர்க்கரை நோயுடன் இவ்வளவு ஊர்களுக்குப் போய் இப்படியொரு சங்கீதத்தைப் பொழிந்திருக்க முடியுமா!

அப்படிப்பட்ட சங்கீதத்தை அனேகமாக தினமும் அதிகாலையில் கேட்கும் பாக்கியம் எனக்குக் கிடைத்தது. பல சமயங்களில் தம்பூராவுடன் சாதகம் செய்து கொண்டிருப்பார்; சில நாட்களில் நித்ய அனுஷ்டான சுலோகங்களைப் பாடிக் கொண்டிருப்பார்; வேறு பல தினங்களில் பூஜை அறையில் சத்ய சாயி பாபாவுக்கு ஹாரத்தி எடுத்தபடி 'ஜெய் ஜகதீஷ ஹரே' பாடுவார். இந்த ஹாரத்தியில் நானும் கலந்து கொள்ள வேண்டும்; கூட பாட வேண்டும்! அவ்வப்போது தாம் பாடுவதை நிறுத்தி என் குரலைத் தனித்துக் கேட்டு அவர் மகிழ வேண்டும்! அந்த பக்தி பாவத்திலும் அன்பிலும் நான் நெகிழ்ந்த நொடிகள் என் வாழ்வுக்கு மேன்மை சேர்த்ததைச் சொல்வதா...?

"ஒரு டாக்டரா வராம ஒருநாள் ஷீலா, குழந்தைகளோட சாப்பிட வரக்கூடாதா?'' என்று அவ்வப்போது கனிந்த ப்ரியத்துடன் அவர் அழைத்தபோது நான் உருகிப் போனதைச் சொல்வதா! "அம்மாவைப் பார்க்க சீக்கிரமே வரேன்னு சொல்லு...", "அவினாஷ், உபாஸனா (என் குழந்தைகள்) சௌக்கியம்தானே...?" என்று அவ்வப்போது நலம் விசாரிப்பு. "பத்திரமா ஓட்டிண்டு போ, கார்த்தால என்ன சாப்பிட்டே? மத்தியானம் சாப்பிட நேரமாகுமே... நடுவில ஏதாவது சாப்பிட்டுக்கோ" என்று அன்றாடம் கரிசனத்தோடு வற்புறுத்தல்..; நாள் தவறாமல் போர்ன்விடாவோ சுக்குக்காப்பியோ சாப்பிட்டுவிட்டுத்தான் போக வேண்டும் என்ற அன்புக் கட்டளை... இவற்றால் என் காலைப்பொழுதுகள் உரமேறின. சுருதி சுத்தமான,



அவருக்கு 46 வயதுதான். அம்மாவுக்கோ 37 வயது! இசையுலகில் கொடி கட்டிப் பறந்துகொண்டிருந்த குஞ்சக்கா, என் அம்மாவின் துக்கத்தை உத்தேசித்து ஒரு வருட காலத்துக்கான (ஒப்புக் கொண்ட) கச்சேரிகளை ரத்து செய்தார்! இந்த முடிவை எடுத்தவர் மாமாதான் என்று சொல்லத் தேவையில்லை... ஆனால், ஒரு வித்வாம்ஸினி என்ற முறையில் குஞ்சக்கா செய்த தியாகம் எத்தகையது என்பது இப்போது தான் எனக்குப் புரிகிறது... என் அம்மாவுக்குக் குஞ்சக்காவுடன் இருந்த அலாதியான பந்தம் எத்தனை ஆழமானது, அதற்குக் காரணம் என்ன என்பதும் விளங்குகிறது... அவர் காலமாகி எட்டே மாதங்களுக்குப் பிறகு என் அம்மாவும் திடீரென்று நலிந்துபோய் தனது குஞ்சக்கா இருக்குமிடம் தேடிச் சென்றதன் மர்மம் விடுபடுகிறது.

அன்பில் பரிசுத்தமான இந்த ஆரம்பத்துக்குப் பிறகு ஏதோ தெய்வ தரிசனம் செய்தது போன்ற பலத்தில் எனது மற்ற பணிகளைத் தொடர்வேன்.

ஆமாம்! குஞ்சக்காவும் மாமாவும் எனக்கு கண் கண்ட தெய்வங்கள் மட்டுமல்ல - மாதா, பிதா, குரு, தெய்வம் என்ற அனைத்து ஸ்தானங்களிலும் பொலிந்து என்னை ஆளாக்கியவர்கள்.

படிக்க வைத்ததும், எனது பொருளாதார சுதந்திரத்துக்கு வித்திட்டதும் ஒரு பக்கம் இருக்கட்டும். மணிப்பாலில் நான் ஹாஸ்டலில் தங்கியிருந்தபோது என்னைக் காண வந்திருக்கிறார்கள். எனது நண்பர்களுக்குச் சளைக்காமல் ஆட்டோகிராஃப் போட்டுத் தந்து, மங்களூர் ரயிலடியில்கூட அவர்களுடன் க்ரூப் போட்டோ எடுத்துக் கொள்ள ஒத்துழைத்து... நினைத்துப் பார்க்க முடியாத எளிமையுடன் பழகியிருக்கிறார்கள். எளிமையையும் ப்ரியத்தையும் கற்றுத் தந்திருக்கிறார்கள்.

அவர்களுடைய கருணையின் உச்சத்தை என் தாயார் கூறிய சம்பவம் மூலம் புரிந்துகொண்டேன்:

என் அப்பா காலமானபோது

குஞ்சக்கா பற்றிய நினைவுச் சுழல்களில் நான் பொக்கிஷமாகக் கருதி மனத்தில் பொதிந்து வைத்துள்ள இனிய காட்சி ஒன்று... எனக்கு அப்போது ஐந்து வயதுதான். ஆசைக்கு மிருதங்கம் பயின்று வந்தேன். வீட்டில் உறவினர் ஒருவருக்குச் சீமந்த கல்யாணம். பாடுவதற்கு அமர்ந்த குஞ்சக்கா என்னை அழைத்து வந்து உட்கார வைத்து, தமக்கு மிருதங்கம் வாசிக்கச் சொன்னார்...! சொன்னால் நம்புவதற்குக் கஷ்டமாக இருக்கும்... போட்டோவில் பாருங்கள்... சாக்ஷாத் நான்தான்!

இப்போது சொல்லுங்கள்... மாதா, பிதா, குரு, தெய்வம் யாவுமே குஞ்சக்காவும் மாமாவும்தான் என்று நான் கூறுவதில் என்ன மிகை இருக்கிறது! இப்படிப்பட்ட அன்பு மனத்தில் தோய்ந்து வெளிப்பட்ட சங்கீதம், அழியாத்தன்மையுடன் இன்று உலகை மலர்வித்துக் கொண்டிருப்பதில் என்ன வியப்பிருக்கிறது!

தொகுப்பு: **ஸ்ருதிகீர்த்தி**



வாழ்நாள் முழுக்க எதன் நினைப்பு ஒருத்தன் மனஸில் ஜாஸ்தியாக இருக்கிறதோ, அதைப் பற்றிய சிந்தனைதான் அந்திமத்தில் வரும். இப்படி நமக்குக் கடைசியில் பகவத் ஸ்மரணம் வருமா என்று நிச்சயப்படுத்திக் கொள்வதற்கு ஒரு பரீக்ஷை வைத்துக் கொள்ளலாம். அதாவது:

அன்றன்றைக்கும் நாம் தூங்குகிறோம் அல்லவா? இதையும் ஒரு சாவு மாதிரி என்றுதான் சாஸ்த்ரங்களில் சொல்லியிருக்கிறது. தூங்குகிறபோது கட்டை போல ஒன்றும் தெரியாமல், ஞானமே இல்லாமல்தானே கிடக்கிறோம்? இதனால்தான் இப்படிச் சொல்லியிருக்கிறது. 'நித்யப் பிரளயம்' என்று தூக்கத்தைச் சொல்வார்கள். இப்படித் தினமும் நாம் 'சாகிற'போது பகவானையே ஸ்மரித்துக்கொண்டு 'சாக' முடிகிறதா என்று அப்யாஸம் பண்ணிப் பார்க்கலாம். தூங்குகிறதற்கு முன்னால் நம் இஷ்ட தேவதையையே ஸ்மரித்துப் பார்க்க வேண்டும். அந்த நினைப்போடேயே தூக்கத்தில் ஆழ்ந்து விட வேண்டும். வேறே நினைப்பு வரக் கூடாது.

'இதிலே என்ன கஷ்டம் இருக்கிறது? மனஸுக்கு ரம்யமாகவும் ஆறுதலாகவும் இருக்கப்பட்ட இந்த ரூபங்களை நினைப்பதில் என்ன ச்ரமம்?' என்றுதான் தோன்றும். ஆனால் எதனாலோ, சிறிது நேரமானால் இத்தனை நல்ல, திவ்யமான ஸ்மரணையை விட்டு விட்டு மனஸ் வேறெங்கேயாவதுதான் போய் விழும், அப்படியே கண்ணை அசக்கித் தூக்கத்தில் கொண்டுபோய் விட்டுவிடும். இப்படி ஏமாறாமல் பழக்கிக்கொண்டால் சாகிற ஸமயத்திலும் பகவானை விடாமல் நினைக்க முடியும் என்ற நிச்சயத்தைப் பெறலாம்.

- ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்

# வேறே நினைப்பு கூடாது!

"என்னமோ பறவைக் காய்ச்சலாம்! ஆட்கொல்லியா மாறி, ஆயிரக்கணக்குல மனிதர்களையும் அழிச்சுடுமாமே! நல்ல வேளை, நான் சுத்த சைவம்! முட்டை, கோழி எல்லாம் கண்ணால்கூட பார்க்க மாட்டேன். அப்பாடி, நான் தப்பிச்சேன்" என்று நிம்மதிப் பெருமூச்சு விட்டுக்கிட்டிருக்கீங்களா? மேலே படிக்கவும்.

"அசைவம் சாப்பிடறவங்களுக்கும், கோழிப் பண்ணையில் வேலை செய்யறவங்களுக்கும், கோழி, வாத்து, இறைச்சியுடன் புழங்குகின்றவர்களுக்கும் மட்டும்தான் பேர்ட் ஃப்ளூ வரணும்னு அவசியமே இல்லை. காற்றின் மூலம் நிமிஷமாகப் பரவி, வீரியத்துடன் தாக்கும். இந்தத் தொற்று ஏற்பட்ட மூன்றிலிருந்து ஏழு நாட்களுக்குள் ஆளையே கொன்று விடும்" என்கிறார் டாக்டர் பி.சௌந்தரராஜன், போரூர் ராமச்சந்திரா மருத்துவமனையின் சிறுநீரக இயல் தலைமை மருத்துவர்.

"இரண்டு வருடங்களுக்கு முன்பு 'சார்ஸ்' என்கிற பயங்கரமான விஷக் கிருமி, சீனா மற்றும் அதைச் சுற்றியுள்ள நாடுகளில் பரவி, சீனப் பொருளாதாரத்தையே நிலை குலையச் செய்தது. ஆனால் சமீபத்தில் கிளம்பியுள்ள இந்த H541 என்கிற 'ஏவியன் ஃப்ளூ வைரஸ்' தொற்றுக் கிருமியோ பேரழிவுக் கொடூரமாக உலகையே தாக்கும் வாய்ப்புள்ளது. அதனால்தான் இதை 'பான்டெமிக்' என்கிறோம் (சர்வதேச அளவில் பரவி அழிக்கக் கூடியது)

பறவைக் காய்ச்சல் என்பது ஒரு வித இன்ஃப்ளுயன்ஸா வைரஸ் தொற்றுதான். இன்ஃப்ளுயன்ஸா வைரஸ் கிருமிகளில் ஏ, பி, சி என மூன்று வகை உள்ளன. இதில்

# தலைக்கு மேல் விஷக்கத்தி!





'டைப் ஏ' வைரஸ் மட்டுமே பறவைகளை, கால்நடைகளைத் தாக்கி, அவற்றின் இரத்த ஓட்டத்தைப் பாதித்துச் செயலிழக்கச் செய்யும். இதற்கு 'ஆர்த்தோ மிஸ்கோ வைரிடியே' என்று பெயர்.

ஸ்பெயின் நாட்டில் 1918ல் இந்நோய் பறவைகள் மூலமாகப் பரவி, கோடிக்கணக்கான மக்கள் ஸ்பானிஷ் ஃப்ளூவுக்கு பலியானார்கள். 1956ல் ஆசியாவிலும், 69ல் வியட்நாமிலும் மக்கள் கூட்டம் கூட்டமாகச் செத்து விழுந்தபோது, தடுப்பூசி, கட்டுப்படுத்தும் மருந்து கண்டு பிடிக்கும் ஆராய்ச்சியில் இறங்கினர்.

* டாக்டர் பி.சௌந்தரராஜன்



இந்தப் பறவைக்காய்ச்சலின் விநோதமான சோகம் என்ன தெரியுமா? அது ஒவ்வொரு முறை, தாக்கும்போதும், நோய்க் கிருமிகளின் வீரியமும் உருவமும் தன்மையும் மாறிக்கொண்டே இருக்கும். அதனால் தடுப்பு மருந்தைக் கண்டு பிடிக்கும் முன்னரே, பறவைக் காய்ச்சல் மின்னல் வேகத்தில் பலிவாங்கிவிட்டுப் பறந்து விட்டிருக்கும்!

தற்போது துருக்கி, ருமேனியா, ரஷ்யாவைத் தாக்கியுள்ள இந்நோய் பறவைகளையும், கால்நடைகளையும் கூண்டோடு கைலாசம் அனுப்பிவிட்டு, லட்சக்கணக்கான மனிதர்களையும் தொற்றியுள்ளது. அப்படியே, ஐரோப்பிய ஆசிய நாடுகளையும் தாக்கும் அபாயம் இருக்கிறது என்பதால் உலக சுகாதார நிறுவனம் உலகெங்கும் பெரும் விழிப்புணர்வு பிரசாரம் மேற்கொண்டிருக்கிறது.

**ப**றவைக் காய்ச்சலின் அறிகுறிகள் என்ன?

103 டிகிரி வரை ஜுரம் அடிக்கும். தலைவலி கடுமையாக இருக்கும். கை, கால் சோர்ந்து போகும். வறட்டு இருமல், சளி, உடம்பு வலி என சாதாரண நிமோனியா காய்ச்சலின் அறிகுறிகள்தான் தென்படும். ஆனால் கவனக்குறைவாக இருந்துவிட்டால், நுரையீரல், மூளை போன்ற முக்கிய உறுப்புகளைத் தாக்கி மரணத்தை ஏற்படுத்தும்.

சார்ஸ் போன்ற நோய்கள், தொடுபவர்களையும், நெருங்கிப் பழகுபவர்களையும் மட்டுமே தாக்கும். ஆனால் H541 கிருமியோ, இன்கு பேஷன் பீரியடான 3 - 7 நாட்களுக்குள்ளேயே அதாவது பாதிக்கப்பட்ட நோயின் அறிகுறிகள் வெளிப்படையாகத் தெரிவதற்கு முன்னரே, அதிவேகமாக நோயைப் பரப்பி விடும். அதனால்தான் இப் பேரழிவைத் தடுக்கும் முயற்சியில் அமெரிக்க ஐரோப்பிய நாடுகள், வளர்ந்து வரும் ஆசிய நாடுகளுடன் ஒன்றிணைந்து செயல்பட்டு வருகின்றன.

பறவைக் காய்ச்சலுக்கு தடுப்பூசிதான் இல்லை. நிவாரண மருந்தும் கிடையாதா?

'ஆஸல்டாம்விர்' என்ற இரசாயனக் கலவை கொண்ட 'Tammy flu' என்ற மருந்து ஒன்றுதான் இந்தக் காய்ச்சலைக் கட்டுப்படுத்தும் மருந்தாக உலகச் சந்தையில் விற்

—மிரளும் இந்தியா



உலகிலேயே அதிக செய்தித்தாள் பிரதிகளை வெளியிடும் முதல் நாடு சீனா. மொத்தம் 85 மில்லியன் பிரதிகள். அடுத்து இந்தியா. 72 மில்லியன் பிரதிகள். 20 சதவிகித மக்களே எழுதப்படிக்கத் தெரிந்த ஆப்கானிஸ்தானில் 2002ல் வெளியான செய்தித்தாள் பிரதிகளின் எண்ணிக்கை 265 மட்டுமே. செனகலில் செய்தித்தாள் குதிரைக் கொம்பு. ஒரு செய்தித்தாளின் விலையும் ஒரு கிலோ அரிசியின் விலையும் ஒன்றே. இங்கு 60 சதவிகித மக்கள் செய்திதாளை இரவல் வாங்கி வாசிக்கிறார்கள்.

# புள்ளி விவரப் புலி!

கப்படுகிறது. ஆனால் இந்த மாத்திரையின் விலை நூற்று ஐம்பது டாலர்கள். அதாவது ஆறாயிரம் ரூபாய்க்கு மேல்! இதை பத்து நாட்கள் ஒரு கோர்ஸாக எடுத்துக் கொள்ள வேண்டும் என்பதால், சிகிச்சை செலவு லட்சக்கணக்கில் ஆகிவிடும்.

பறவைக் காய்ச்சல் தொற்று ஏற்பட்டால் என்ன செய்ய வேண்டும்?

தற்போது இந்தியாவில் H541 உலக வைரஸ் கிருமிகள் தொற்றி இருப்பது உறுதிப் படுத்தப்படவில்லை என்றாலும், விழிப்புடன் இருப்பது நல்லது. இன்ஃப்ளுயன்ஸா காய்ச்சலுக்கு ஆண்டி - வைரஸ் மருந்துகள் ஓரளவு பயன்படும். அதுதவிர, நோயாளிகளுக்குத் தனி அறையில் அமைதியான ஓய்வு தேவை. அவருடன் இருக்க நேரும் அனைவரும் முக உறைகள் அணிந்து கொள்ள வேண்டும். எச்சில், சளி போன்றவற்றில் வைரஸ் வெளியேறும் என்பதால் மூக்கு, வாய் போன்ற பகுதிகளைச் சுத்தமாக வைத்துக் கொள்வதும் மிக அவசியம். சுத்தமான நீரை நிறையப் பருகினால், நோயின் நச்சுத் தன்மை சிறுநீரில் வெளியேறிவிடும்.

மனிதன் தன்னுடைய நடவடிக்கைகளால், பறவை, விலங்கு போன்ற உயிரினங்களை அழிக்கிறான். அவற்றிடம் தங்கியிருக்கும் நுண்கிருமிகள், தாங்கள் வாழ புதிய இடங்களைத் தேடும்போது, மனிதர்களைத்தான் குறிவைக்கின்றன என்பதை நாம் உணர வேண்டும். இது இயற்கை தரும் எச்சரிக்கை எனப் புரிந்து செயல்பட வேண்டும்.

கோழி இறைச்சி, முட்டை போன்றவற்றை இறக்குமதி செய்யத் தடை விதித்து, விமான கப்பல் தளங்களில் கடுமையான மருத்துவப் பரிசோதனை, செய்தாலே பறவைக் காய்ச்சல் இந்தியாவுக்குள் ஊடுருவாமல் தடுக்கலாம். ஆனால் பறந்து வரும் பறவைகளை யார் கண்காணிக்க முடியும்? எனவே, தலை மேல் விஷக்கத்தி தொங்குகிறது என்ற உணர்வோடு சுகாதார அமைப்புகள் செயல்பட வேண்டும்'' என்றார் டாக்டர் சௌந்தரராஜன்.

- மினி

# ஜொள்... ஜொள்...!



"குழப்பமா இருக்கும்மா!"

"என்னடி குழப்பம்?"

"ஷூட்டிங்குக்குப் போறதா, ஹியரிங்குக்குப் போறதான்னு தெரியலை!"

- ஞா.ஞானமுத்து



"என்னப்பா... சாப்பாட்டில் இவ்வளவு பெரிய கல் இருக்கு?"

"தாங்க்ஸ் சார்... இந்த செல்ஃபோனைதான் காலையிலேயிருந்து தேடிக்கிட்டிருக்கேன்."

- லீலாஜி



"ஆபீசுல புதுசா ஒரு குறட்டைச் சத்தம் வருதே... யாரோடது?"

"அது என்னோட செல்ஃபோன் ரிங் டோன் சார்!"

- அம்பை தேவா



" 'நவீன சுயம்வரம்' நிகழ்ச்சிக்குத் தலைவரை தலைமை தாங்கக் கூட்டிக் கிட்டுப் போனது தப்பாப் போச்சு!"

"ஏங்க?"

"இருக்கறது பத்தாதுன்னு, சுயம்வரத்துல இருந்து ஒரு பொண்ணைத் தேர்ந்தெடுத்து, ஜோடி ஆக்கிட்டாரு!"

- யமுனா ரெங்கநாதன்

யசோதரை ஒரு நீண்ட நெடிய பெருமூச்சிட்டாள். அரண்மனை மேல் மாடியின் பெரிய சாளரத்தின் வெளியே தெரிந்த தோட்டம் அற்புதமாய் இருந்தது. வைகாசி மாத பௌர்ணமியின் நிலவொளியில், ஏதோ இந்திர லோகத்து கற்பகத் தோட்டமே, கபிலவஸ்து நகருக்கு இடம் பெயர்ந்து வந்தது போல் ஒரு பிரமிப்பு.

ஆனாலும் யசோதரையின் மனதில் மகிழ்ச்சி இல்லை.

சாளரத்திலிருந்து திரும்பிய யசோதரை தூங்கிக்கொண் டிருந்த தனது மகன் இராகுலனைப் பார்த்தாள். இத்தனை ஆண்டுகள் அவள் உயிர் வாழ்வதற்கு இவனே காரணம். சோகப் புயல் காற்று அவள் நெஞ்சில் பெருக்கெடுத்து ஆடு கின்றபோது, அவள் பறந்து போகாமல் நிலைபெற்று இருக்கக் காரணமான நங்கூரம் இந்த இராகுலனே...

தூங்கிக்கொண்டிருந்த இராகுலனை அணுகி அவன் தலையை மெல்லத் தடவிக் கொடுத்தாள் யசோதரை. இப்போதெல்லாம் அவன் தன் தந்தையைப் பற்றிக் கேட்பதை நிறுத்திவிட்டான். ஆனாலும் அந்தக் கேள்வி அவன் மனதில் ஒலித்துக்கொண்டிருப்பதை அவள் அறிவாள். பதில் கிடைக்காத காரணத்தினாலேயே அந்தக் கேள்வி பதுங்கியிருப்பதை அவள் புரிந்து கொண்டாள்.

யசோதரை மீண்டும் சாளரத்திற்கு வந்து வெளியில் பார்த்தாள். கீழ்வானம் சிவக்க ஆரம்பித்திருந்தது. இந்தப் பௌர்ணமியும் முடிந்து போயிற்று என்று அவள் நினைத்துக்கொண்டாள். இந்த

# புத்த சாகரம்

வைகாசி மாதப் பௌர்ணமிக்கும் அவள் வாழ்க்கைக்கும் நெருங்கிய தொடர்பு போலும். ஒரு வைகாசிப் பௌர்ணமியில்தான் அவள் கண வன் பிறந்தான். பிறகு ஒரு வைகாசிப் பௌர்ணமி யில்தான் அவள் மகன் இராகுலன் பிறந்தான். அதற்கு அடுத்த வைகாசிப் பௌர்ணமியில்தான் அவள் கணவன் அவளை விட்டுப் பிரிந்தான்.

அந்த நிகழ்வை நினைக்கையில் இன்னமும் யசோதரையின் உடல் நடுங்கியது. உறங்கப் போகையில் அருகில் இருந்த கணவன், விழிக்கையில் இல்லை. பனிரெண்டு ஆண்டுகளுக்கு முன்பு இதே வைகாசிப் பௌர்ணமியில்தான் நடந்தது அந்த நிகழ்வு. அதற்கு முன்புதான் எத்தகைய இனிமையான வாழ்க்கை. தேனொத்த இனிப்பு... என்ன ஒரு பூரிப்பு. சித்தார்த்தனது ஜாதகத்தின் விசேஷத்தை யசோதரையின் தந்தை பல முறை சிலாகித்துப் பேசினார். அகில உலகையும் ஆளப்

ஹேமா இராஜ்

போகும் மன்னன் இவன் என்றார். அப்படியானால் நீதான் இந்த உலகத்துக்கு மகாராணி என்று யசோதரையின் அம்மா இடைமறித்தாள். பூரிப்பு... அப்படி ஒரு பூரிப்பு. உலகத்து இன்பங்களை எல்லாம் எனக்காகவே இறைவன் திரட்டித் தருகிறான் என்ற ஒரு நிலைப்பாடு. கண் நிறைந்த கணவன்; எந்த வகையிலும் குறைவிலாத வாழ்க்கை; அழகு மைந்தன் இராகுலன். இனிப்பு, இன்பம் சேர்ந்த நாட்கள். எல்லாம் அந்த வைகாசிப் பௌர்ணமி வரைதான். அன்றைய பகல் பொழுதில் ஊர்வலம் போகிறேன் என்று கிளம்பினான் சித்தார்த்தன். கணவனை வெளியுலகம் அறியாமலேயே தனது மாமனார் வளர்த்து வந்ததை யசோதரை அறிவாள். ஆகையால் கணவன் இப்போது வெளியில் போக வேண்டும் என்றபோது யோசித்தாள்.

"ஏதோ தோன்றுகிறது. வெளியே போய் வருகிறேன். தந்தை அறிய வேண்டாம்..." என்றான் சித்தார்த்தன். கணவன் கட்டளையை யசோதரை ஏற்றுக்கொண்டாள். ஏனோ உள் மனம் தவித்தது. ஒரு பொழுதுதானே, போய் நலமாக வருவார். நாளை



உலகு ஆளப் போகிறவர் அல்லவா. வெளி உலகம் தெரிய வேண்டியதுதானே. போய் வரட்டும் என்று உற்சாகம் பேசிக் கொண்டு வழி அனுப்பி வைத்தான்.

திரும்பி வந்தது வேறு சித்தார்த்தன் என்று உடனே புரிந்துகொண்டாள். அவன் அவ்வளவு சிந்தனை வயப்பட்டு அவள் பார்த்ததில்லை. அவன் தந்தையின் அரச சபையில் பலவித தத்துவங்களை அலசி ஆராயும் தத்துவ ஞானிகளிடம் கூட அவள் அந்த அளவு ஆழமான சிந்தனையைக் கண்டதில்லை. உணவு கூட உண்ணாமல், இதே சாளரத்தின் வழியே வெளி பார்த்திருந்தான் சித்தார்த்தன். அருகே சென்று பேசப் போன யசோதரையிடம் கூட, அவன் முகம் கொடுக்கவில்லை.

“நீ உறங்கு யசோதரை நான் தூங்குவேன் என்று தோன்றவில்லை....”

காரணத்தைக் கேட்க யசோதரைக்குப் பயம். இதுவரை காரணங்கள் கேட்டு அவளுக்குப் பழக்கமில்லை. மீண்டும் சாளரம் வழி வெளி பார்த்திருந்த சித்தார்த்தன் தோள் தொட்டாள். உடனே அவன் உடலில் உண்டான நடுக்கம் உணர்ந்து கை எடுத்துக்கொண்டாள். “நீ உறங்கு யசோதரா. நான் வருகிறேன்...”

“நான் வருகிறேன்” என்பதை தனக்கு சித்தார்த்தன் கொடுத்த பிரிவுச் சொல்லாகவே பின்னாளில் யசோதரை கருதினாள். மணமுடித்த மனைவியிடம் கூட சொல்லாமல் கொள்ளாமல் சித்தார்த்தன் கிளம்பிவிட்டான் என்று மற்றவர்கள் சொன்னபோது, “இல்லை... என்னிடம் அவர் சொல்லிக்கொண்டார். நான்தான் அதைப் புரிந்து கொள்ளவில்லை..” என்று அவள் இதயம் அலறும்.

அவள் ஆழ்ந்து உறங்கியும் ஆயிற்று பன்னிரண்டு ஆண்டுகள்... இனி ஆழ்ந்து உறங்கவே முடியாது என்பதற்காகவோ என்னவோ, அன்றைய இரவில் அவள் அப்படி உறங்கினாள். இருள் சூழ்ந்த ஆழ் உறக்கம்... விழித்துப் பார்க்கையில் அவன் வாழ்க்கை ஒளியும் அருகில் இல்லை.

எல்லோரும் அலறி அடித்து அழுகையில் யசோதரை மட்டும் பிரமிப்புக் கலையாமல் இருந்தாள். ஆழ்ந்த உறக்கத்தின் நடுவில் இது ஏதோ கனவு. இதோ இது இப்போது முடிந்து விடும். நிஜமாக விழிக்கையில் சித்தார்த்தன் மடியில் நான் இருப்பேன். என் கன்னத் தோடு கன்னம் வைத்து இழைத்தவாறு அவன் இருப்பான். அவனது பரந்த தோள்களை தழுவியபடி தூக்கம் கலைகையில் என்னவொரு இன்பம். அந்த இன்பம் மறுபடி வரப் போகிறது. இதோ இந்த தீக் கனவு கலையப் போகிறது. இப்போதுகூட சில சமயங்களில் இன்னமும் கனவு காண்பதாகவே அவள் நினைத்துக் கொள்வாள். ஆனால் அந்த நினைவுகள் அரிதாகவே இப்போதெல்லாம் ஆகி வருகின்றன. நிஜம் அவளை தீர்க்கமாகவே சுட ஆரம்பித்து வருடங்கள் பல ஆகிவிட்டன. ஒவ்வொரு வருட வைகாசி விம்மல்களும் கண்ணீரும் இராகுலனை எழுப்பி விடக்கூடாது என்பதில் அவள் கூடுதல் அக்கறை செலுத்த வேண்டியிருக்கும்.

ஆனாலும் இதோ இந்த வைகாசிப் பௌர்ணமியில் ஒரு விசேஷம் இருந்ததை அவள் நினைவு கூர்ந்தாள். வழக்கம் போலவே பௌர்ணமி நிலவு

“கனகாஸ்ரீ சொன்னதை பெருசா எடுத்துக்க வேண்டாம்னு சொல்லியும் அவங்களை கோர்ட்ல ஆஜராகச் சொல்லி சம்மன் அனுப்பியிருக்கீங்களாமே.. ஏன் யுவர் ஆனர்?”

“எனக்கு மட்டும் கனகாஸ்ரீயை நேர்ல பார்க்க ஆசை இருக்காதா!”

- கேஜிஎஸ்.



அவளை எரித்துக்கொண்டு தான் இருந்தது. ஆனாலும் நள்ளிரவு வேளையில் சட்டென்று ஒரு அமைதி பூத்தது. வெளி உட்பட ஐந்து மகா பூதங்களிலும் அந்த அமைதி ஊடுருவுவதை அவள் உணர்ந்தாள். மரங்கள், செடிகள், கொடிகள் மட்டுமின்றி தடாகங்களிலும் சுவர்களிலும் அந்த அமைதி பரவுவதை அவள் உணர்ந்தாள். ஏன் கற்களும் கூட ஒருவித அமைதியில் ஆழ்வது அவளுக்குத் தெரிந்தது. பிரபஞ்சம் முழுவதும் பரவிய அந்த அமைதி, தன்னிலும் கணங்களில் தளும்புவதை அவள் உணர்ந்தாள்.

இருளான அமைதி அல்ல அது. ஆனந்தப் பரவசத்தோடு கூடிய அமைதி. அறிவின்மையின் சலனமின்மை அல்ல அது. அறிவின் பூரணம். ஆனால் அதன் காரணத்தை அவளால் அறிய முடியவில்லை.

சற்று நேரமே நீடித்த அமைதி, பழகிப்போன சிந்தனைத் தடங்களால் கலைந்து போனது. ஆனாலும் அதன் வாசம் மட்டும் நீடித்தது. இப்போது அதை நினைவு கூர்ந்த யசோதரையை பணிப் பெண்ணின் வரவு கலைத்தது.

"தேவி.. தங்களைப் பார்க்க ஒரு துறவி வந்திருக்கிறார்..."

வெளுக்கத் தொடங்கியிருந்த கிழக்கை யசோதரை பார்த்தாள். மௌனம்.. பணிப் பெண்ணே பேசினாள்.

"அவரைப் பார்க்கப் பார்க்க என்னுள் ஏதோ ஒன்று உடைகிறது தேவி. அமைதிப் பரவசம் பூக்கிறது. நீங்கள் அவரைப் பார்க்க வேண்டும் என்று தோன்றுகிறது. உங்களுக்கும் அமைதி கிட்டும் என்று நம்புகிறேன்..."

"வரச் சொல்..." என்றாள் யசோதரை.

"மற்றொரு விஷயம் தேவி."

"சொல்..."

"இது வசந்த கால மலர்கள் பூக்கின்ற பருவமா...?"

சற்றுக் கோபத்துடனே பதில் சொன்னாள் யசோதரை.

"இல்லையே... வசந்தம் வர இன்னமும் நாட்கள் இருக்கின்றன மித்ரி."

"ஆனால் இந்தத் துறவி வந்ததும் நமது



''ஆனாலும் தலைவர் இவ்வளவு அல்பத்தனமா நடந்துக்கக் கூடாது.''

''என்ன விஷயம்?''

''ஆரத்தித் தட்டுல இருந்த காசை எடுத்து பாக்கெட்ல வச்சுக்கிட்டாரே!''

- சீர்காழி வி.ரேவதி

---

நந்தவனத்தில் இருக்கும் வசந்த கால மலர்கள் எல்லாம் பூத்துக் குலுங்குகின்றன தேவி... பெரும் ஆச்சரியம்..."

"மேற்கொண்டு பேசிக்கொண்டிருக்காமல் அவரை உடன் அழைத்துவா மித்ரி."

பெரும் அமைதியுடன் துறவி உள்ளே நுழைந்ததும் யசோதரை ஸ்தம்பித்துப் போனாள். மித்ரி மட்டுமல்ல. மகா கவிகள்கூட அந்தத் துறவியின் பெருமையை முழுமையாக வர்ணிக்கக் கூடிய வார்த்தைகளை வைத்திருப்பார்களா என்றே யசோதரை சந்தேகப்பட்டாள். துறவியின் அடையாளத்தை முந்திக் கொண்டு அவரின் அமைதியும் நிறைவும் யசோதரையை நிரப்பின. இத்தனை நாள் சோகம் கரைந்துபோக மனது லகுவானது. கூப்பிய கைகளுடன் அருகில் போனதும்தான் அவள் அடையாளம் கண்டுகொண்டாள். உடன் மண்டியிட்டாள்.

"ஸ்வாமி..."

ஆழ்மனதில் நிரம்பியிருந்த சோகம், தாபம், கோபம் எல்லாம் விம்மல்களாகவும் கேவல்களாகவும் வெடித்துக் கிளம்பின.

யசோதரை நிமிர்ந்து பார்த்தாள். அந்த கருணை ததும்பிய முகத்தில் அவள் தன் பழைய கணவனைத் தேடினாள். இனி என்றுமே அவனைக் காண முடியாது என்பதை அவள் உடனே புரிந்து கொண்டாள். கூடவே தனது சோகமும் கோபமும் கூட காணாமல் போய்விட்டதை அவள் உணர்ந்தாள். ஏதோ தனது கண்ணீரோடு அவையும் கலந்து அவளை விட்டுப் போய் விட்டதைப் போல் ஒரு உணர்வு.

"யசோதரை..." என்றார் துறவி. அவர் குரலில்கூட எவ்வளவு மாறுதல். மென்மையாகவும் இனிமையாகவும் இப்போது ஒலிக்கும் குரலில்தான் எவ்வளவு ஆற்றல்.

"ஸ்வாமி..."

"நேற்றிரவு என் தேடல் முடிந்தது. நான் தேடியதை என்னுள்ளேயே கிடைக்கப் பெற்றேன்."

அந்த இரவில் தோன்றிய திடீர் அமைதிக்கு யசோதரைக்குக் காரணம் தெரிந்தது. அவள் அமைதியாக இருந்தாள்.

"பிறகு எனக்கு முதலில் வந்தது உனது நினைவுதான். உன்னைக் காணவே வந்தேன்."

யசோதரை குழப்பத்துடன் துறவி முகம் பார்த்தாள். துறவி மென்மையாகச் சொன்னார். "உனனிடம் மன்னிப்பு கேட்க வேண்டும் யசோதரை. என்னை மன்னித்து விடு."

தீக்கங்குகள் மேல் விழுந்தது போல் யசோதரை துடித்துப் போனாள்.

"ஸ்வாமி. என்ன இது. நான் உங்களை மன்னிப்பதா. பெரும் அபராதம்.."

"இல்லை யசோதரை. உனக்கு நான் பெரும் தீங்கு விளைவித்து விட்டேன். தவிர்க்க முடியாததாக இருந்தாலும், உன்னளவில், ஒரு பெரும் துக்கத்தில் நான் உன்னை ஆழ்த்திவிட்டேன். அதற்காக உன்னிடம் நான் மன்னிப்புக் கேட்டே ஆக வேண்டும். யசோதரை என்னை மன்னித்து விடு..."

யசோதரை மெதுவாகப் பதிலளித்தாள்.

"ஸ்வாமி தங்களைப் பார்த்ததும் எனது வருத்தங்களை எல்லாம் நான் வென்று விட்டேன்..."

"நன்றி யசோதரை... நான் வருகிறேன்..."

திரும்பி நடந்த துறவி யசோதரையின் குரல் கேட்டு நின்றார்.

"ஸ்வாமி..."

"சொல் யசோதரை..."

"தங்களுடைய தேடலினால் தாங்கள் அடைந்தது மிக உயர்ந்தது என்பதை நான் அறிவேன். எனது சந்தேகமெல்லாம் இங்கிருந்தபடியே அதை அடைந்திருக்க முடியாதா என்பதுதான்..."

சில கணங்கள் அமைதியாய் இருந்த துறவி பதிலளித்தார்.

"எங்கிருந்தாலும் அதை அடைய முடியும் என்பதை இப்போது அறிகிறேன் யசோதரை."

துறவி சென்ற பின்னும் நீடித்திருந்த அமைதியில் யசோதரை இலயித்துப் போனாள்.



# நடக்குமென்பார்; நடக்கும்!

**மேஷம்:** நற்பலனைத் தரும் வாரம். புதிய முயற்சிகள் கைகூடும். தனம், கல்வி மேல் ஓங்கும். குடும்பத்தில் சுபகாரியம் நடக்கும். வழக்கு வெற்றி பெறும். சத்ரு தொல்லை இருக்காது. உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். உத்தியோகஸ்தர்களுக்குப் பதவி உயர்வு, பணி மாற்றம் வரும். வியாபாரிகளுக்கு நல்ல காலம். திருமணம் நடக்கும். ஆஞ்சநேயரை வழிபட்டு வந்தால் சகல தோஷம் விலகி நற்பலனை அடைவீர்கள்.

**ரிஷபம்:** ராசிநாதன் சுக்ரன் 8-ல் இருந்து ராசிக்கு 2-ம் இடத்தை பார்வையிடுவதால் தனம் கிட்டும். கொடுக்கல், வாங்கல் சிக்கல் தீரும். குழந்தைகளைப் பற்றின கவலை தீரும். வழக்கு வெற்றிப் பாதையில் செல்லும். மனதில் தைரியம், தன்னம்பிக்கை கூடும். குழந்தைப் பேறு ஏற்படும். உத்தியோகஸ்தர்களுக்கு வெளிநாடு அழைப்பு ஏற்பட்டு குடும்பத்தை விட்டுப் பிரிந்து செல்ல நேரிடும். வியாழன் தோறும் குரு ப்ரீதி செய்து வருதல் நற்பலனை அளிக்கும். கேதுவை வழிபட மனசலனம் போகும்.

**மிதுனம்:** நன்மை தரும் வாரம். எடுக்கும் காரியம் ஒவ்வொன்றிலும் வெற்றி அளிக்கும். புதிய தொழில் / வீடு / வாகனம் வாங்கலாம். திருமணம் கை கூடும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். நீண்டநாள் பிரச்னை முடிவுக்கு வரும். வியாபாரிகள் நற்பலனை அடைவார்கள். கொடுக்கல், வாங்கல் நன்றாக இருக்கும். ஆபரணப் பொருட்கள் வாங்குவார்கள். சிலருக்கு வெளிநாட்டு வியாபாரம் கை கொடுக்கும். நண்பர், உறவினர்கள் மூலம் அனுகூலம் கிட்டும். ராகு / கேது வழிபட்டு வருதல் நற்பலனைத் தரும்.

**கடகம்:** திருமணக் காரியம் கை கூடும். மாணவ, மாணவிகள் படிப்பில் முன்னேற்றம் காண்பார்கள். குழந்தைகள் வழியில் சுப நிகழ்ச்சிகள் நடக்கும். தெய்வ அனுகூலம் ஏற்படும். சிலருக்கு வீடு மாற்றம், உத்தியோக மாற்றம் ஏற்படும். ஆரோக்கியம் பாதிக்காது. வியாபாரத்தில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். செலவுகள் கட்டுக்குள் இருக்கும். வியாழன் தோறும் தட்சிணாமூர்த்தி சுவாமிக்கு தீபம் போடவும்.

தஞ்சை பரத்வாஜ்

**சிம்மம்:** மேன்மை தரும் வாரம் ஆகும். பண வரவு கிடைக்கும். கணவன், மனைவி விட்டுக் கொடுத்துப் போவது நற்பலனைத் தரும். கொடுக்கல், வாங்கலில் எச்சரிக்கை அவசியம். வண்டி வாகனத்தில் செல்லும் போது கவனம் செலுத்தவும். உத்தியோக வேலைப்

13.11.2005 முதல் 19.11.2005 வரை

**● எனது மகளுக்குத் திருமணம் எப்போது அமையும்? அவளது கணவரின் குணம் - படிப்பு எப்படியிருக்கும்? மகளுக்கு சர்ப்பதோஷம் உள்ளது. மணவாழ்க்கை எப்படி அமையும்?**

**- பெங்களூர், பெயர் வெளியிட விரும்பாத வாசகி**

தங்கள் பெண்ணுக்கு 23 வயது முடிவடைந்து 24வயது நடக்கிறது. இது முடிந்து அடுத்து வரும் புதன் புத்தியில் திருமணம் நடக்கும். குறிப்பாக 30.9.2006க்கு மேல் நடக்கும். வரக்கூடிய பையன் வெளிநாட்டில் வேலை செய்யும் வரனாக அமையும். ஒரே பையன், உறவு கிடையாது. படித்த, பண்புள்ள, குணமுள்ள பையன். ஜாதகம் பார்க்கும்போது சர்ப்பதோஷம் உள்ள பையனைச் சேர்க்க வேண்டும்.

**● என் பையனுக்குத் திருமணம் நடந்து விவாகரத்தும் ஆகிவிட்டது. அவனுக்கு மறுவிவாகம் நடக்குமா? ஜாதகத்தில் தோஷம் எதுவும் உள்ளதா?**

**- நாக்பூர், பெயர் குறிப்பிட விரும்பாத வாசகர்**

உங்கள் பையனுடைய ஜாதகம் சுத்த ஜாதகம். எந்தவித தோஷமும் இல்லை. நீங்கள் உங்கள் பையனுக்குச் சரிவரப் பொருந்தக் கூடிய ஜாதகத்தைச் சேர்க்க வேண்டும். சரிவரப் பொருந்தாத ஜாதகத்தால்தான் இரண்டாவது திருமணம் பண்ணும் சூழ்நிலை ஏற்பட்டுள்ளது. பையனது 40வது வயதில் திருமணம் நடக்கும். பரிகாரம் தேவையில்லை. பிறந்த ஊருக்கு

பளு அதிகரிக்கும். அவசரப்பட்டு வேலை மாறுதல் செய்யக் கூடாது. திருமணம் ஆகாதவர்கள் சௌந்தரராஜ பெருமாளுக்கு திருக்கல்யாண உற்சவம் செய்து அருகில் இருக்கும் ஆஞ்சநேயரை வழிபட்டு வர திருமணம் உடன் கை கூடும்.

**கன்னி**: குடும்பத்தில் சுபகாரியங்கள் கை கூடும். கணவன், மனைவி உறவு நற்பலனை அளிக்கும். கொடுக்கல், வாங்கல் நன்மை அளிக்கும். திருமணம் கைகூடும். மாணவ, மாணவிகள் நல்ல மதிப்பெண்கள் பெறுவார்கள். நல்ல வேலை வாய்ப்புத் தேடி வரும். பொருளாதாரம் நன்றாக இருக்கும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். வியாபாரிகள் தொழில் விரிவாக்கம் செய்ய நேரிடும். அயல்நாட்டு வியாபாரம் செழிப்புடன் விளங்கும். புதிய வீடு வாங்கலாம். குழந்தைகள் வழியில் சந்தோஷம் ஏற்படும். ராகு / கேது வழிபட்டு வருதல் நலம் பயக்கும்.

**துலாம்**: தனம், கல்வி மேல் ஓங்கும். திருமணம் கை கூடும். வழக்கு முடிவுக்கு வரும். உத்தியோகத்தில் வேலைப் பளு அதிகரிக்கும். சிலருக்குத் தூர தேச அழைப்பு கிட்டும். குழந்தைகள் வழியில் மன சந்தோஷம் கிடைக்கும். உடல் நிலையில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். நண்பர், உறவினர் மூலம் ஆதாயம் கிட்டும். ஆஞ்சநேயரை வழிபட்டு வந்தால் சகல தோஷம் விலகி நல்லது நடக்கும். குரு / சனி வழிபடுதல் நலம் தரும்.

**விருச்சிகம்**: பொருளாதாரக் கஷ்டங்கள் விலகி நற்பலனை அளிக்கும். வழக்கு வெற்றி பெறும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். கணவன், மனைவி உறவு நன்றாக இருக்கும். சிலருக்குக் குழந்தைப் பேறு ஏற்படும். வீட்டில் சுப செலவுகள் வரும். உத்தியோகஸ்தர்களுக்கு வேலை உயர்வு / வெளிநாடு செல்லக் கூடிய வாய்ப்பு வந்து சேரும். மாணவ, மாணவியர் படிப்பில் தேர்ச்சி பெறுவார்கள். திருமணம் கைகூடும். வாக்கு நாணயம் காப்பாற்றப்படும். குரு / ராகு / கேது வழிபட்டு வருதல் நன்மை அளிக்கும்.

**தனுசு**: ராசி நாதன் குரு ராசிக்கு 11-ல் சஞ்சாரம் செய்தால் புதிய முயற்சி கைகூடும். நல்ல காரியம் நடக்கும். வீடு / உத்தியோக மாற்றம் வரும். உடல் நிலை பாதிக்காது. குழந்தைகள் வழியில் சுப காரியம் நடக்கும். மனசலனம் போகும். மனதில் தன்னம்பிக்கை ஏற்படும். வியாபாரிகள் புதிய தொழில் செய்யும் வாய்ப்பு வந்து அணுகும். நீண்ட நாள் கனவு பலிக்கும். பொருளாதாரச் சிரமம் இருக்காது.

தெற்கு/மேற்கு திசையில் வரன் அமையும்.

## பரத்வாஜ் பதில்கள்

**● வங்கி ஒன்றில் அதிகாரியாகப் பணி புரியும் என் தம்பிக்கு ஓராண்டு காலமாக வரன் பார்த்து வருகிறோம். எப்போது அவன் திருமணம் நடைபெறும்?**

**- ஆர். மீனாட்சி, சென்னை-44**

செல்வன் நாகேஸ்வரன் ஜாதகப்படி 2006 ஆரம்பத்தில் திருமணம் முடியும். படித்த, பண்புள்ள, குணமுள்ள, வேலையில் இருக்கும் பெண் அமையும். பரிகாரம் வேண்டாம். ஈஸ்வரி பெயரில் வரன் அமையும்.

**● என் பையனுக்குத் திருமணம் எப்பொழுது நடக்கும்?**

**- வி.சிவகாமு, நோடியா**

உங்கள் பையனுக்கு 41 வயதில் திருமணம் கைகூடும். சர்ப்பதோஷம் இருப்பதால், சர்ப்பதோஷம் உள்ள பெண்ணாகப் பார்த்துச் சேர்க்கவும்.

நண்பர்கள், உறவினர்கள் மூலம் ஆதாயம் கிட்டும். சிலருக்கு வெளியூரிலிருந்து நல்ல தகவல் வரும். பெருமாளை தரிசித்து வரவும். சனி, பீடை விலகிச் செல்லும்.

**மகரம்:** எப்பேர்ப்பட்ட சிக்கலையும் தீர்க்கக் கூடிய ஆற்றலைத் தரும். தெய்வ பலம் ஆத்மபலம் ஏற்படும். புதிய சொத்துகள் வாங்கலாம், உத்தியோகத்தில் நல்ல மாற்றம் ஏற்படும். வெளிநாட்டு அழைப்புக் கிட்டும். கொடுக்கல், வாங்கல் நலம் தரும். புதிய தொழில் செய்ய ஏற்ற காலம். கணவன், மனைவி உறவு நன்றாக இருக்கும். திருமணத் தடை விலகி திருமணம் நடக்கும். மாணவ, மாணவியர்கள் படிப்பில் முன்னேற்றம் காண்பார்கள். வழக்கு வெற்றி பெறும். உடல் ஆரோக்கியம் பாதிக்காது. உத்தியோகத்தில் வேலைப் பளு இருக்கும். குரு வழிபாடு நன்மைகளைத் தரும்.

**கும்பம்:** தொழிலில் எதிர்ப்புகள் குறையும். கொடுக்கல், வாங்கலில் சிக்கல் தீரும். புதிய வேலை வாய்ப்புத் தேடி வரும். குடும்பத்தில் சுபச் செலவு ஏற்படும். செலவுகள் கட்டுக்குள் இருக்கும். ஆரோக்கியக் கோளாறு வரும். பேச்சில் கவனம் தேவை. புதிய வீடு வாங்கலாம். மனதில் இருக்கும் குழப்பம் தீரும். கணவன், மனைவி அனுசரணை தேவை. நீண்ட தூர பிரயாணம் வெற்றி அளிக்கும். உத்தியோகத்தில் வேலைப் பளு அதிகரித்தாலும் அதற்குண்டான சன்மானம் கிடைக்கும். ஒருசில நண்பர்களால் அனுகூலம் ஏற்படும். கேது காயத்ரி படித்து வருதல் நலம் தரும்.

**மீனம்:** விபரீத ராஜ யோகத்தை அளிக்கும் வாரம். எந்தக் காரியம் எதிர்பார்த்தாலும் கை கூடும். வேலைப் பளு அதிகரிக்கும். பூர்வீக சொத்துகள் பாகப் பிரிவினை ஏற்படும். கணவன், மனைவிக்குள் அனுசரணை தேவை. கொடுக்கல், வாங்கல் நன்றாக இருக்கும். வியாபாரிகளுக்கு நல்ல முன்னேற்றம் ஏற்படும். மாணவ, மாணவிகள் படிப்பில் முன்னேற்றம் காண்பார்கள். உடல் ஆரோக்கியம் பாதிக்காது. சிலருக்கு இருப்பிடம் மாறும் சூழ்நிலை வரும். சத்ரு தொல்லை குறையும். உத்தியோகஸ்தர்களுக்கு வேலை மாற்றம் வரலாம். வெளிதேசம் செல்லும்படியான சூழ்நிலை வரும். வியாழக்கிழமை தோறும் ராகவேந்திர ஸ்வாமிகளை வழிபட்டு வருதல் நலம் தரும். அருகில் யோக நரசிம்ம சுவாமியைத் தரிசனம் செய்யவும். ○

மனத்தளவில் உயர்ந்த நிலையை அடைந்தவர்களால் மட்டுமே, எப்படிப் பட்ட சௌகரியங்களையும் அனுபவிக்கவும், அதே நேரத்தில் எந்தக் கணத்திலும் அந்த வசதிகளை உதறித் தள்ளிவிட்டு, சாதாரண வாழ்க்கையை மேற்கொள்ளவும் முடியும்.

இத்தகைய பிரிவைச் சேர்ந்தவர் தான், தன் டிரைவரையும் கூட அழைத்துக்கொண்டு ஈகோ பார்க்காமல் பஸ்ஸில் பயணம் செய்கிற பணக்காரர். அப்படி இல்லாமல், 'தான் பெரிய மனிதன்' என்பதைப் பறைசாற்றிக் கொள்ள விரும்புகிற, ஈகோ நிறைந்த மனிதர்களில் ஒருவர்தான், பஸ்ஸில் போகத் தயங்கும் பணக்காரர்.

இன்னும் சொல்லப்போனால், சென்ற அத்தியாயத்தில் குறிப்பிட்ட, விக்டர் ஹியூகோ வர்ணித்த காட்சியில் வருகிற, மரக்கிளையில் உட்கார்ந்து கொண்டிருக்கிற பறவையைப் போன்றவர் முதல் பணக்காரர். மரக்கிளையைப் பிடித்துக்கொண்டு, உயிர் பிழைக்க நினைக்கும் மனிதனைப் போன்றவர்தான் இரண்டாவது பணக்காரர்.

இன்னும் சிலர் இருக்கிறார்கள். அவர்களுக்கு உள்ளூர ஆசை இருக்கும். ஆனால், அதனை வெளிப்படையாகக் காட்டிக்கொள்ள மாட்டார்கள். 'வேண்டாம்!' என்று ஒப்புக்கு மறுப்பார்கள். ஆனால் இத்தகைய மனிதர்களின் வேஷம் வெகு காலத்துக்கு நீடிக்காது. சீக்கிரமே குட்டு வெளிப்பட்டு விடும்.

ஆசையைப் பற்றி அறிஞர் ராபர்ட் பிரௌனிங்ஸ் குறிப்பிடும் கருத்து கவனிக்கத்தக்கது. ஏன் மனிதனுக்கு ஆசைகள் வருகின்றன தெரியுமா? என்ற கேள்வியை எழுப்பி அவர் தருகிற விளக்கம் இது : ஆசைகள் மனிதனுக்கு விடப்படுகிற சவால்கள். அவற்றைத் துணிவுடன், சந்தித்து, மன உறுதியுடன் செயல்பட்டு, தன்னுடைய காலடியில் வீழ்த்தி, வெற்றி பெற வேண்டும் என்பதற்காகத்தான்.

ஆனால், ஆசைகளைக் கட்டுப் படுத்த முடியாமல், மனிதன் அடங்கிப் போய் விடுகிற போது, மனிதன் ஆசை வலையில் சிக்கிக்கொண்ட அடிமையாகி விடுகிறான்.

நிறைவான வாழ்க்கை வாழ வேண்டும். இதுதானே நம் எல்லாருடைய ஆசையும்? யாரிடம் வேண்டுமானாலும் போய், 'ஐயா! உங்களுடைய வாழ்க்கை நிறைவாக இருக்கிறது என்று தாங்கள் நினைக்கிறீர்களா?' என்ற கேள்வியை மெதுவாகக் கேளுங்கள். ஏறத்தாழ அனைவரும், 'ஓ! வாழ்க்கை மிகவும் நிறைவாக இருக்கிறது!' என்று பதில் சொல்லி நிறுத்திவிட மாட்டார்கள். 'நிறைவாகத்தான் இருக்கிறது. ஆனாலும் ஒரே ஒரு குறை உண்டு. அது மட்டும் தீர்ந்து விட்டால்...?' என்று பதிலின் முதல் பகுதிக்கு ஒரு இலவச இணைப்பைக் கொடுப்பார்கள்.

சில தினங்களிலோ, சில மாதங்களிலோ இல்லாது போனால் சில வருடங்களிலோ, அந்தக் குறை தீர்ந்து போகிறது. அவர் ரொம்ப ஆசைப்பட்ட விஷயம் நடந்து விடுகிறது என்று வைத்துக்கொள்வோம். நியாயப்படி பார்த்தால், அந்த மனிதர் இப்போது சந்தோஷமடைய வேண்டும். குறிப்பிட்ட குறையும் தீர்ந்து போனதில் ஒரு நிறைவு ஏற்பட்டுவிட்ட எண்ணம் அவருக்கு வரவேண்டும். ஆனால்

# ஆசையே வலை

சுனந்தாஜி

யதார்த்தத்தில் அப்படி நடக்கிறதா? இல்லையே!

ஏற்கெனவே அவரது மனதுக்குள் இருந்து வந்த ஒரு விஷயமோ அல்லது வேறு ஏதாவது ஒன்று புதிதாகவோ முளைக்கிறது. 'எல்லாம் ஓ.கே! இதுதான் சின்னக் குறை! அது மட்டும் நிறைவேறி விட்டால்... என்னை விட மகிழ்ச்சியானவன் வேறு ஒருவன் இருக்க முடியாது' என்று சொல்வான். அது நிறைவேறும் கட்டத்தில், தாற்காலிகமாக ஒரு நிறைவு ஏற்படும். ஆனால், சீக்கிரமே பழைய கதைதான்.

இப்படி வாழ்க்கை முழுக்க அடுத்தடுத்து நடந்துகொண்டே இருக்குமேயொழிய, அந்த மனிதருக்கு மனநிறைவு என்பது, கேரட்டை விரட்டிக்கொண்டே ஓடிக்கொண்டிருக்கிற கழுதை போலத் தொடர்ந்து துரத்திக்கொண்டே ஓடுகிற ஒரு சமாசாரமாகவே இருக்கும். இந்த 'நான்-ஸ்டாப் துரத்தல்' ஆயுளுக்கும் தொடரும்.

வாழ்க்கையை, அதன் உண்மையைப் புரிந்து கொள்ளாதவரை இந்தத் துரத்தல் எல்லா மனிதர்களையும் தொடர்ந்துகொண்டே இருக்கும். வாழ்க்கையில் மன நிறைவு, நிம்மதி, மகிழ்ச்சி எல்லாம் கானல் நீர் போல ஆகிவிடும். கண்ணுக்குத் தெரியும். கிட்டே போனால் இருக்காது.

உண்மையைப் புரிந்துகொள்ளும் பாதையைத் தேர்ந்தெடுத்து, அதில் சந்தோஷமாகப் பயணிப்பதை விட்டுவிட்டு, சந்தோஷத்தைத் துரத்திக்



• படம்: ஸ்ரீஹரி

# போலே!



*"தேர்தலில் நிற்க எதுக்கு லோன் கேட்கறீங்க?"*

*"ஆடு, மாடு வாங்க லோன் தர்றீங்கல்ல... அந்த மாதிரி வாக்காளர்களை வாங்கணும்!"*

*- லீலாஜி*



கொண்டு ஓடுகிற வேலையைச் செய்து கொண்டிருந்தால், தாற்காலிக சந்தோஷங்களும் ஏக்கங்களும் விரக்தியுமே மிஞ்சும். தண்ணீரிலிருந்து எடுத்து வெளியே போடப்பட்ட மீனைப் போல துடித்துக்கொண்டே இருக்க வேண்டியதுதான். "நீங்கள் சொல்வதெல்லாம் சரிதான்! ஆனால் எனக்குத் தலைக்கு மேல் ஏகப்பட்ட வேலைகள் இருக்கின்றனவே; எனக்கு நேரமே இல்லையே! என்ன செய்ய?" என்று கேள்வி கேட்கலாம்.

அந்தக் கேள்விக்கு என் பதில் இதுதான் : நீங்கள் தேர்ந்தெடுத்து பயணித்துக்கொண்டிருக்கிற பாதை சரியானது இல்லை. பாதையை மாற்றுங்கள். பயணத்தைத் தொடருங்கள். தேடிக்கொண்டிருக்கும் புதையல் கிடைக்கும்.

**நா**ன் பகவத் கீதை சொற்பொழிவின்போது சொல்லும் 'ஸ்பிரிங்' உதாரணம், மிகப் பிரபலமானது. காரணம், அதை நான் அடிக்கடிச் சொல்லுவதுதான். அதனாலேயே, 'இந்த அரங்கத்தில் புதிதாக ஒருசிலர் வந்திருக்கலாம். அவர்களுக்கு இந்த 'ஸ்பிரிங்' உதாரணம் தெரியாமல் இருக்கலாம். ஆனால், அவர்கள் அதைக் கண்டிப்பாகத் தெரிந்துகொள்ள வேண்டும். அதன் மூலம் வாழ்க்கையைப் புரிந்துகொள்ள வேண்டும்" என்று விளக்கம் தருவேன்.

சரி! இப்போது ஸ்பிரிங்கின் கதையைப் பார்க்கலாம்.

நீங்கள் நின்றுகொண்டிருக்கிறீர்கள். உங்களுக்குப் பக்கத்தில் நாலு அடி உயரத்துக்குப் பெரிய அளவில் ஒரு ஸ்பிரிங் நிறுத்தி வைக்கப்பட்டிருக்கிறது. அதன் மேல் நீங்கள் கையை வைக்கிறீர்கள். அழுத்தம் எதுவும் தர வேண்டாம். சும்மா கையை வைத்துக்கொண்டு இருங்கள். கையில் ஏதாவது அழுத்தமோ, வலியோ இருக்கிறதா? இல்லையல்லவா?

இப்போது இலேசாக அந்த ஸ்பிரிங் மீது அழுத்தம் கொடுங்கள். அது அழுந்துகிறதல்லவா? எங்கே இன்னும் கொஞ்சம் பிரஷர் கொடுங்கள். இன்னும் அழுந்துகிறதா? இப்படியே உங்கள் கையின் மூலம், அந்த ஸ்பிரிங் மீதான அழுத்தத்தைக் கொஞ்சம் கொஞ்சமாக அதிகரித்துக்கொண்டே போங்கள்.

நாலு அடி உயரத்துக்குக் கம்பீரமாக நின்று கொண்டிருந்த ஸ்பிரிங், மூன்றடி உயரத்துக்கு வந்து விட்டதா? சரி, அதன் மீது இன்னமும் பிரஷர் கொடுங்கள். கை கொஞ்சம் வலிக்கிறதா? பரவாயில்லை. சிரமம் பார்க்காமல் அழுத்தத்தை அதிகரித்துக்கொண்டே இருங்கள்.

இப்போது ஸ்பிரிங், தரையிலிருந்து இரண்டடிதான் இருக்கிறது. ஆக, நாலு அடி உயரத்துக்குக் கம்பீரமாய் நின்று கொண்டிருந்த ஸ்பிரிங், இப்போது, இரண்டடி உயரத்துக்குக் குறைக்கப்பட்டு விட்டது. இது எப்படி நடந்தது? எல்லாம் நீங்கள் கொடுத்த பிரஷர்தான் காரணம்.

அப்படியே நில்லுங்கள். ஸ்பிரிங்கின்

மீதான அழுத்தத்தைக் கொஞ்சமும் தளர்த்தி விடாதீர்கள். கை எப்படி இருக்கிறது? நீங்கள் எப்படி உணர் கிறீர்கள்?

ஸ்பிரிங் மேல்நோக்கி விரிவடைய முயற்சி செய்வதால், அதன் பாதிப்பை கைகளில் உங்களால் உணர முடிகிறது அல்லவா?

அதாவது, நீங்கள் ஸ்பிரிங்கின் மீது கொடுத்த அழுத்தம், அதனைக் கட்டுப்படுத்தியது. இப்போது, ஒவ் வொரு வினைக்கும் எதிர்வினை உண்டு என்பது போல, அந்த ஸ்பிரிங், தான் கிரகித்துக்கொண்ட பிரஷரை, இப் போது உங்கள் கை மீது திரும்பச் செலுத்துகிறது.

விளைவு? உங்கள் கையை மேல் நோக்கி எழ வைக்க, அந்த ஸ்பிரிங் அழுத்தத்தைக் கொடுக்கிறது. சிறிது நேரம் அப்படியே வைத்துக்கொண்டி ருந்தால், ஸ்பிரிங்கின் பிரஷரை முழுமை யாக உங்களால் உணர முடியும்.

சரி! கொஞ்சம் கொஞ்சமாய் கையை மேலே தூக்குங்கள். அதற்கேற்ப, ஸ்பிரிங்கும், விரிவடைந்துகொண்டே வருகிறது. மூன்றடி உயரத்துக்கு ஸ்பிரிங் விரிவடைய சௌகரியமாய், கையைத் தூக்குங்கள். இப்போதும் ஸ்பிரிங்கின் மேல்நோக்கிய அழுத்தம் தொடர்ந்து இருக்கிறது. ஆனால், அதே சமயம், இரண்டு அடியாக இருந்தபோது இருந்த அழுத்தத்தைவிடக் குறைவாக இருப்ப தையும் உணரலாம்.

அப்படியே இன்னமும் கையை இலேசாக்கி, மேலே தூக்குங்கள். சிறிது சிறிதாக உயரம் அதிகரித்து, ஸ்பிரிங் தன் ஒரிஜினல் அளவான நாலு அடி யைத் தொடட்டும். உங்கள் கை அதன் மேல் தானே இருக்கிறது? இப்போது எப்படி உணருகிறீர்கள்?

கையில் முன்பிருந்த பிரஷர் இல்லையே! ஏன்? இதற்கு விஞ்ஞான ரீதியில் விளக்கம் தர முடியும். நான் அதைச் செய்யப் போவதில்லை.

அப்புறம்?

(வெற்றி தொடரும்)

மாணிக்கம் மாமா ஊரில் இறந்து விட்டதாகத் தகவல் வந்தது. சைக்கிளில் போகிறபோது ஒரு லாரியில் அடிபட்டு 'ஸ்பாட் அவுட்'டாம். அதிர்ச்சியாய் இருந்தது எனக்கு. ஆனால், உடனே என்னால் கிளம்ப முடியவில்லை. சென்னைக்கும் கோவைக்குமான தூர இடைவெளி, இந்த மாதிரித் திடீர் சம்பவங்களில் என்ன செய்வதென முடிவெடுக்க முடியாமல் திணற வைக்கும். இந்த முறையும் அப்படித்தான். போகலாமா, வேண்டாமா என என் யோசனையில் குழப்பம் வர - அம்மாவே மீண்டும் போன் செய்தாள்.

"பன்னீர்..."

"சொல்லும்மா..."

"நீ கிளம்பி கோயமுத்தூர் வர்ற வரைக்கும் பாடியை வெச்சுட்டு இருக்க மாட்டாங்க. நீ அடிச்சுப் புடிச்சுக் கிளம்பாதே! அடுத்த வாரம் லீவுக்கு வரும்போது போய்த் துக்கம் விசாரிச்சுக்கலாம். இங்க ஆக வேண்டியத நானும் அப்பாவும் பாத்துக்கறோம்..." என்றாள்.

என் குழப்பம் தீர்ந்தது. இதுதான் அம்மா. என் மனதைத் தூரத்திலிருந்தே படிக்கிற அம்மா. "சரிம்மா" என்றேன்.

மாணிக்கம் மாமா. வயது நாற்பது இருக்கும். நல்ல உயரம். ஒல்லி உருவம். அடர்த்தியாய் மீசை. சைக்கிளில் வருவதே கம்பீரமாகத்தான் இருக்கும். மாணிக்கம் மாமா எனக்குத் தாய் மாமா அல்ல. சொந்தத்தில் மாமா முறை.

மாமாவுக்குப் பால் வியாபாரம்.



மூன்று பசு மாடுகள் கட்டி வீட்டிலேயே சின்னப் பண்ணை வைத்திருக்கிறார். இரண்டு ஏக்கரில் நிலம் இருக்கிறது. சொந்த வீடு. பத்து வயதில் ஒன்றும் ஐந்து வயதில் ஒன்றுமாய் இரண்டு குழந்தைகள்.

சாப்பாட்டுக் கஷ்டமில்லாத ஜீவனம் என்றாலும், மாமாவுக்கு ஒரு கெட்டப் பழக்கம் இருந்தது. பயங்கரமாய் 'தண்ணி' அடிப்பார். ஊருக்கு வருகிறபோது 'என்ன மாப்ளே கவனிக்க மாட்டீங்கற' என்பார். 'காசு வேணா தர்றேன் நீங்க என்ன வேணாலும்

சரசுராம்

பண்ணிக்கங்க. என்னை விட்டுருங்க' என்பேன். 'போ. மாப்பிள்ளை, நீ டவுனுல இருக்க லாயக்கில்ல' என்று கேலி செய்வார். அப்படிக் குடித்துவிட்டு வண்டியை ஓட்டியதால், விபத்தில் சிக்கிக்கிட்டாரோ என்னவோ? எது எப்படியோ அவர் கதை முடிந்து விட்டது. பாவம், அவரது குடும்பம்தான் இடி விழுந்து கலங்கி நிற்கும். அதிலும் அத்தை ரொம்பச் சின்ன வயசுக்காரி. முப்பது வயசுக்குள்ள தான் இருக்கும். எப்படி ஆறுதல் சொல்வது? புரியவில்லை.

சாவு நடந்த அன்றே அங்கிருந்திருந்தால் கூட்டத்தோடு செய்வதைச் செய்து வருத்தப்பட்டு வந்திருக்கலாம். இனி, தனியே போய் என்ன செய்வது? எப்படி விசாரிப்பது? பழக்கமில்லாததால், தவிப்பாக இருந்தது. சரி, அம்மாதான் இருக்கிறார்களே கேட்டுக்கொள்வோம்.

கோவை. வீட்டுக்கு வந்ததும், முதல் வேலையாக மாமா வீட்டுக்குக் கிளம்பினேன். அத்தைக்கு என்ன ஆறுதல் சொல்வதெனத் தெரியவில்லை. மனதிற்குள் என்ன சொல்வதெனக் கொஞ்சம் ஓட்டிப் பார்த்தேன். ஒன்றும் ஓடவில்லை. அம்மாவிடமே கேட்டேன்.

''அத்தைக்கு என்னம்மா ஆறுதல் சொல்றது...?'' என்றேன்.

அம்மா தலையில் அடித்துக்கொண்டாள். அப்பா உள் அறையிலிருந்து சிரித்தார்.

''என்னடா குழந்தை மாதிரி கேட்கற. இதெல்லாம் சொல்லியா கொடுப்பாங்க....?''

# ''என்னம்மா சொல்றது?''

"வர்ற இருபதாம் தேதி ஷூட்டிங்கை திருச்சியில் வெச்சுக்கங்க சார்!"

"ஏம்மா?"

"அன்றைக்கு அங்கே ஆஜராகச் சொல்லி கோர்ட் சம்மன் வந்திருக்கு!"

- லீலாஜி



"திடீர்னு போய் அத்தைகிட்ட என்ன பேசறது... ப்ளீஸ் சொல்லும்மா..."

"அய்யோ... அய்யோ...! மெகா சிட்டில வேலை பார்க்கற... கம்ப்யூட்டர் என்ஜினியர். அதைத் தவிர வேற எதுவும் தெரியறதில்ல..."

"சரி, தெரியாது... சொல்லு..."

"என்னடா சொல்றது... நடந்தது நடந்து போச்சு... இனிமேல்தான் நீங்க தைரியமா இருக்கணும்! சொந்தம்னு நாங்க எல்லாம் எதுக்கு இருக்கோம்? எதுன்னாலும் வந்து நிற்க மாட்டோமா? கவலைப்படாதீங்க. எல்லாத்துக்கும் மேல கடவுள் துணையிருப்பார்னு சொல்லுடா..."

"அப்படியே சொல்றேம்மா!"

அம்மா சொன்னதை மனத்தில் ஏற்றிக் கொண்டேன். ஒருமுறை சொல்லிப் பார்த்துக்கொண்டேன். அம்மாவுடன் கிளம்பினேன். பஸ்ஸில் போகும் போதும் ஏதோ டிராமா ரிகர்சலுக்குப் போற மாதிரி, இரண்டு தடவை சொல்லிப் பார்த்துக் கொண்டேன்.

**அ**த்தை வீடு. ஓடு வேய்ந்த கூரை. குளிராய் காற்று வந்தது. அகண்ட முன் அறையில் ஒரு ஆட்டுக் குட்டி. சுவரில் போட்டோவில் மாலை போட்ட மாமா. பின்புறக் கொட்டகையில் மாடுகள் தெரிந்தன. அத்தை வந்து அமர்ந்தார்கள். தலையை முடிந்து கொண்டார்கள். இன்னும் முகத்தில் சோகம் இருந்தது. இளைத்தும் களையில்லாமலும் இருந்த அத்தையைப் பார்க்கவே கஷ்டமாக இருந்தது.

'நடந்தது நடந்து போச்சு...' அம்மா சொன்ன ஆறுதல் வார்த்தைகள் எனக்குள் ஒரு முறை ஓடின.

"மருமகனுக்கு துக்கம் விசாரிக்க இன்னைக்குத்தான் வர முடிஞ்சதோ...?" அத்தை ஆரம்பித்தார்கள்.

"அத்தை என் வேலை அப்படி... என்னைத் தப்பா நினைச்சுக்காதீங்க..."

"அது பரவாயில்ல நான் சும்மாதான் கேட்டேன். யாரு வந்து என்ன பிரயோஜனம்..? போன உசுரு திரும்பவா போகுது...?" என்றபடி அத்தை அழ ஆரம்பித்தார்கள்.

"அத்தை எதுக்கு அழறீங்க. இங்க பாருங்க..." என்று நான் சொல்ல நினைத்ததை ஆரம்பிக்கும் முன்பு அத்தை அழுகையை நிறுத்திக் கொண்டாள். கண்களைத் துடைத்துக் கொண்டே, "இனி அழுது என்ன ஆகப் போகுதுன்னு... எனக்கும் தெரியும் கண்ணு... அந்தாளு குடிச்சுட்டு வந்து பண்ணின கொடுமைக்கெல்லாம் இனி விடுதலைன்னு நினைச்சுக்க வேண்டியதுதான். இரண்டு மாடு, கன்னு இருக்கு. அப்படியே பால் ஊத்திப் பிழைச்சுக்குவேன். கையளவு விவசாயக் காடு இருக்கு. இந்த ரெண்டு குழந்தைகள வளர்த்து ஆளாக்கிடுவேன். கையில வலு இருக்கு. நெஞ்சுல தைரியம் இருக்கு. துணைக்குக் கடவுள் இருக்காரு. நீங்க இருக்கீங்க. எனக்கு வேறென்ன வேணும் சொல்லு...?"

நான் சொல்ல நினைத்ததை அத்தை அப்படியே சொல்லிவிட்டாள். அதுவும் உறுதியான தொனியில். இனி நான் என்ன சொல்ல? என் ஆறுதல் வார்த்தைகளை உள்ளுக்குள் அடக்கிக் கொண்டேன். நான் அம்மாவைப் பார்த்தேன். என் பார்வையைத் தவிர்க்க, அம்மா ஜன்னல் வழியே தோட்டம் பார்த்தாள். ○

"ஓ ப்ரெண்ட்ஸ் எல்லாம் கூப்பிட்டாங்களேனு வந்தேன். இனி இதுபோல எங்க நடந்தாலும் முதல் ஆளா போயிடுவேன்"- ஸ்ரீராம், எஸ்.பி.ஓ.ஏ.மாணவன்.

"ஃபிஸிக்ஸ் கிளாஸ்னாலே கடுப்படிக்கும். ஆனா இங்க வந்தபிறகுதான் அது எவ்ளோ ஜாலியான சப்ஜெக்டுனே புரியுது"- எஸ்.ஹேமா, ராணிமெய்யம்மை பள்ளி மாணவி

இந்த மாணவர்களுக்கு என்னாச்சு? ஏன் இந்தப் பரவசம்?



• ரவிஷங்கர்



• கீதா

இந்தியக் கல்வி முறையில் ஒரு பாடத்தின் முழு அர்த்தத்தையும் புரிந்து கொண்டு படிக்கிறார்களா என்பது ஒரு விஷயமே அல்ல; பாடப் புத்தகத்தை 'மடக்மடக்' என்று கரைத்துக் குடித்து, தேர்வுத் தாளில் எந்த அளவுக்கு கக்குகிறார்களோ அந்த அளவுக்கு மதிப்பெண்கள் கூடும். ஆனால் இதுபோன்ற மனப்பாட முறைகள் எல்லாம், மேற்படிப்புகளுக்கும் ஆய்வுகளுக்கும் துளிகூட உதவாது எனப் புரிந்து கொண்டு, 'திடீர்' என்று கண் விழித்துக் கொண்டுள்ளது கல்வித் துறை.

பேஸிக் நாலெட்ஜ், காம்ப்ரிஹென்ஷன், அப்ளிகேஷன் எனப் புரிந்து கொண்டு படிக்கும் முறை மிக மெள்ள புகுத்தப்படவிருக்கிறது.

ஆனால் சில தனியார் கல்வி நிறுவனங்கள், அதையும் தாண்டிய ஒரு விஷயமாக, 'லெர்னிங் கேன் பி ஃபன்' என்ற புதிய யுக்தியைக் கையாண்டு பாடம் கற்பிக்கின்றன. விளையாட்டு, புதிர், செய்முறைப் பயிற்சிகள், எடுத்துக் காட்டுகளின் வழியே கணிதம், அறிவியல் போன்ற பாடங்கள் கற்பிக்கப்படுவது அதிகரித்துள்ளது. சமீபத்தில் 'தி ஹிந்து'வும் எய்ம்ஸ்-ம் சேர்ந்து நடத்திய 'ப்ரெபெல்' என்ற விஞ்ஞான கல்விப் பட்டறையில் ரவிஷங்கரின் ஃபிஸிக்ஸ் செஷனில் பல மாணவர்கள் ஆர்வத்துடன் பங்கேற்றதைப் பார்க்க முடிந்தது.

"முதலில் அனைத்து மாணவர்களையும் ஒரே போல பாவித்து, பாடம் நடத்தும் முறையே தவறானது. உங்கள் மாணவன் அன்னமா, ஆடா, கிளியா, பசுவா என்று இனம் பிரிக்கத் தெரிய வேண்டும். அன்ன வகையைச் சேர்ந்த மாணவர்கள், சுயமாய்ப் புரிந்து கொள்ளும் ஆற்றல் உடையவர்கள். பாட்டு, கராத்தே, டான்ஸ் என எல்லா கிளாஸ்-களுக்கும் சென்று குழம்பிப் போகும் குழந்தைகளை, 'ஆடு' எனலாம். கிளி குணாதிசயம் உள்ளவர்கள், சொல்லித் தருவதை அப்படியே திருப்பிச் சொல்வார்கள். பசு இனத்தினர் அமைதித் திலகங்கள். படித்ததை, பொறுமையாக அசை போடுவார்கள். இப்படி நிறைய விதமான மாணவர்கள் இருக்கும்போது, அவர்களது கிரகிக்கும் திறமைக்கு ஏற்ப, பாடம் சொல்லித் தராததால்தான் அறிவுப்பஞ்சம் ஏற்பட்டுள்ளது. கடந்த ஐந்து வருடங்களில் ஐ.ஐ.டி. செல்லும் தமிழக மாணவர்களின் எண்ணிக்கை சொற்பம்தான்!

# புதிய ஸ்ட்ராவுக்கு ஓ போடுங்க!



டீச்சிங் டெக்னிக்ஸில் புதிய யுக்திகளைப் பயன்படுத்துவதால், மாணவர்கள் சோர்வே தெரியாமல், கிரகித்துக் கொண்டு, செயல்முறையில் அமர்க்களப் படுத்துவார்கள்'' என்கிறார் 'எய்ம்ஸ்' கல்வி நிறுவனத்தின் இயக்குனர் கிதா.

“பக்கம் பக்கமாக தியரி ஒப்பிப்பதை விட, ஒரு சின்ன விளக்கப்படத்தின் மூலம் சுலபமாகக் கற்பித்து விடலாம். உதாரணமாக 'அழுத்தம்' என்கிற






இயற்பியல் கூற்றை, 'விசை / பரப்பளவு' என்ற தியரி மூலம் வளவளக்காமல், சல்லடையை உதாரணம் சொல்லிப் புரிய வைப்பது மிக எளிது. 'ஒரே ஒரு குண்டூசியின் முனையில் கையைப் பதித்தால் 'சுருக்' என்று குத்தும். ஆனால் நூறு குண்டூசிகளை சல்லடையில் குத்தி, அதன் மீது கை வைத்து அழுத்தினால், குத்தாது' என்று செய்தே காட்டும்போது மாணவனும் ஆர்வத்துடன் புரிந்து கொள்கிறான். சம உயரமுள்ள இரண்டு கண்ணாடித் தம்ளர்களை நீரால் நிரப்பி, ஒரு தம்ளரில் ஐஸ் கட்டி ஒன்றைப் போட்டு, ஐஸ் உருகியதும் அந்தக் குறிப்பிட்ட தம்ளரில் தண்ணீர் லெவல் ஏறுமா என்று கேட்போம். ஐஸ்கட்டி, தண்ணீரை விட அடர்த்தி குறைவானது. எனவே மிதக்கிறது. ஆகையால் அது உருகினாலும் அதே வால்யூம்தான் இருக்கும். ஆர்கிமிடிஸ் தத்துவத்தை செய்தே காட்டி, சிம்பிளாக விளக்கலாம்'' என்கிறார் 'ஃபிஸிக்ஸ் ஈஸ் ஃபன்' என்ற விஞ்ஞானக் காட்சிகளை இந்தியா முழுவதும் நடத்தி வரும் ஆசிரியர் ரவிசங்கர். இவர் அமெரிக்கன் இன்டர்நேஷனல் பள்ளியில் விஞ்ஞான ஆசிரியர்.

விளையாடிக் கொண்டே, விஞ்ஞானத்தைக் கற்றுக் கொண்டிருந்த மாணவர்களிடம் நைஸாகப் பேச்சுக் கொடுத்தோம்.

''பாடப்புத்தகத்துல இருக்கிறதை அப்படியே படிச்சு ஒப்பிச்சுக்கிட்டிருந்தோம். குறுக்கு நெடுக்கா கேள்வி கேட்டா, விழிச்சிக்கிட்டு நிப்போம். இப்ப சப்ஜெக்ட்ஸோட அடிப்படை நல்லா புரியறதனால எக்ஸாமுக்கு பயப்படுறதேயில்ல. இன்னிக்கு என்ன புதுசா தெரிஞ்சுக்கப் போறோம்னு ஆவலோட கிளாஸுக்கு வந்தோம்'' என்று கண் சிமிட்டுகின்றனர் மாணவர்கள்.

ஐ.ஐ.டியிலும், ஐ.ஐ.எம்மிலும் படிக்க விரும்பும் மாணவர்களே, சக்கையையெல்லாம் விட்டுவிட்டு சப்ஜெக்டோட எஸன்ஸைப் புரிஞ்சுக்கிட்டுப் படிக்க இதோ ஒரு புதிய ஸ்ட்ரா கிடைச்சாச்சு!

- ச.ந.கண்ணன்

படங்கள் : ஸ்ரீஹரி

நாடகக் கம்பெனி ஊரைவிட்டுப் போன பிறகு, வனஜாவுக்குக் கொஞ்சம் உற்சாகம் பிறந்தது. 'ஏன், மாமா! இனி மேல் திருவழுந்தூர்த் தம்பி நம் வீட்டுக்கு வருவாங்கல்ல?' என்று கேட்டாள். அவள் கேட்டதற்குத் தகுந்தாற்போல், சிவக்கொழுந்தும், இரண்டொரு தடவை வீட்டுக்கு வந்தான். அப்போதெல்லாம் வனஜாவின் தோரணையைப் பார்க்க வேண்டுமே? அடேயப்பா! ராணி என்றால் ராணிதான். குறுக்கே நெடுக்கே





# திருவழுந்தூர் சிவக்கொழுந்து

போவாள். ஆனால் சிவக்கொழுந்தை நிமிர்ந்துகூடப் பார்க்கமாட்டாள். ஏதாவது கேட்டால், பதில் சொல்லவும் மாட்டாள். காதில் கேட்காததுபோல் போய்விடுவாள்.

இதையெல்லாம் பார்க்கப் பார்க்க எனக்கு ஒரு பக்கம் வேடிக்கையாகவும் ஒரு பக்கம் வருத்தமாயுமிருந்தது. நான் அவர்களுக்கு, புத்தி கித்தி ஒன்றும் சொல்லவில்லை சாமி! என்னுடைய உலக அனுபவத்திலே தெரிந்து கொண்டிருக்கிறேன். இந்த மாதிரி இளம் பிள்ளைகள் காரியத்திலே, புத்தி சொல்கிறதானால் பிரயோசனமே ஏற்படுகிறதில்லை. அதனாலேதான் சிவக்கொழுந்து அந்த நாடகக்காரி மையலில் அகப்பட்டிருந்தபோதுகூட நான் ஒன்றும் சொல்லவில்லை. இதிலேயெல்லாம் அவரவர்களும் பட்டுப் பட்டுத் தேறவேண்டும். கஷ்டமோ சுகமோ, அனுபவித்துத்தான் புத்திவர வேண்டும். குறுக்கே ஏதாவது சொன்னோமானால் பைத்தியம் முற்றிப் போய்விடுகிறது.

இப்படி இரண்டு மூன்று மாதம் ஆயிற்று. சென்னைப் பட்டணம் கந்தஸ்வாமி கோயில் உற்சவத்திற்கு சிவக்கொழுந்தை அழைத்துக்கொண்டு வரும்படி எனக்குக் கடிதம் வந்தது. பட்டணத்தில் அந்தப் பழிகாரி இருக்கிறாளே என்று அப்போதே மனசில் நினைத்துக் கொண்டேன். ஆனாலும் அதற்காக வந்த கச்சேரியைவிட முடியுங்களா? கிளம்பிப் போனோம். ஆகா! சாமி! அந்தக் கச்சேரியில் சிவக்கொழுந்து என்னமாய் வாசித்தது என்கிறீர்கள்? அதுதான் கடைசிக் கச்சேரி என்று தம்பியின் அந்தராத்மாவுக்குத் தெரிந்திருந்தது போலிருக்கிறது. அதனால்தான் அவ்வளவு அற்புதமாய் அமைந்ததோ, என்னமோ? ஒரு நாள் ராத்திரி தம்பி பைரவி ராகம் வாசித்தபோது, கேட்டவர்கள் எல்லாம் அழுதுவிட்டார்கள். தம்பியின் வாசிப்பில் முன்னைக்கு இப்போது கொஞ்சம் வித்தியாசம் ஏற்பட்டிருந்தது. முன்னேயெல்லாம், கல்யாணி, சங்கராபரணம், ஹம்ஸத்வனி, நாட்டை, கேதாரம் இந்த மாதிரி ராகங்கள் வாசிப்பதிலேதான் தம்பிக்கு உற்சாகம். எனக்கும் தவுல் வாசிக்க ரொம்ப உற்சாகமாய் இருக்கும். கொஞ்ச நாளாகத் தம்பி

**கந்தப்ப பிள்ளை சொன்ன கதைகள் - 4**

காம்போதி, கேதார கௌளம், ஆரம்பித்திருந்தது. இந்த ராகங்களெல்லாம் வாசிக்கும்போது, எனக்குச் சில சமயம் கண்ணில் ஜலம் வந்து விடும். உடம்பெல்லாம் மயிர்க் கூச்சு எறியும். தவுல் வாசிப்பதற்கே ஓடாது! ஏதோ விரல் வழக்கம்போல் தட்டிக்கொண்டிருக்குமே தவிர, மனசெல்லாம், தம்பியின் வாசிப்பில் ஈடுபட்டிருக்கும். நடு நடுவே, இரண்டு கையையும் தூக்கிக் கும்பிட்டு, 'ஹர ஹரா! மகாதேவா!' என்பேன். இதைப் பார்த்துவிட்டு, சில பேர் சிரிப்பார்கள்; முட்டாள்கள்! சங்கீதம் அனுபவிக்கும் விதம் அவர்களுக்கென்ன தெரியும்?



மூன்று நாள் கச்சேரியும் முடிந்தது. நாலாம் நாள் பொழுது விடிந்தது. "இன்றைக்கு ஊருக்குப் புறப்படலாமா, தம்பி!" என்றேன்.

"கொஞ்சம் பொறுங்கள் மாமா. புதன் கிழமை தானே சிதம்பரத்தில் கச்சேரி? நேரே காரிலேயே போய் விடலாம்" என்றது தம்பி.

சிவக்கொழுந்துக்குக் கொஞ்ச நாளாக மோட்டார் கார் பைத்தியம் ஏற்பட்டிருந்தது. 'டிரைவ்' பண்ணக் கத்துக் கொண்டிருந்தான். அடுத்த தடவை பட்டணம் போகும்போது கார் வாங்கிவர வேண்டுமென்று சொல்லிக் கொண்டிருந்தான்.

அன்று பகலெல்லாம் சுற்றி, கடைசியில் இரண்டாயிரம் ரூபாய்க்கு ஒரு 'ஸெகண்ட் ஹாண்ட்' கார் வாங்கிக் கொண்டு வந்து சேர்ந்தான். சொற்பமைலே ஓடியிருந்தபடியால், 'ஸெகண்ட் ஹாண்டா'ய் இருந்தாலும் வண்டி பார்ப்பதற்கு ரொம்ப நன்றாயிருந்தது.

நல்ல வேளை; கச்சேரியிலும் கார் வாங்குவதிலும் புத்தி சென்றதனால் மனோரஞ்சிதத்தை மறந்துவிட்டான் என்று நான் எண்ணி சந்தோஷப்பட்டேன். ஆனால், அது அற்ப சந்தோஷமாய் போயிற்று. அன்று ராத்திரி சிவக்கொழுந்து நாடகத்துக்குப் போனான். "நீங்களும் வரீங்களா, அண்ணே!" என்று அரை மனசாய்க் கூப்பிட்டான். 'ரொம்ப சிரமமாய் இருக்கிறது; நான் வரவில்லை'யென்று சொல்லிவிட்டேன். அன்று இராத்திரியெல்லாம் என் மனசில் வேதனை குடிகொண்டிருந்தது.

மறுநாள் காலையில் தம்பி ரொம்ப நேரம் கழித்துதான் எழுந்தான். எழுந்ததும் பரபரப்புடன் ஸ்னானபானாதிகளை முடிக்கத் தொடங்கினான். ஜோராக டிரஸ் பண்ணிக் கொண்டான், எல்லாம் ஆனதும் "மாமா! கொஞ்சம் வெளியிலே போய்விட்டு வருகிறேன். சாப்பாட்டுக்கு எனக்காகக் காத்திருக்க வேண்டாம். திரும்பி வருவதற்கு நேரம் ஆனாலும் ஆகும்" என்றான்.

"தம்பி! இதென்ன பேச்சு? நாளைப் பொழுது விடிந்தால் சிதம்பரத்தில் இருக்க வேண்டுமே? புறப்படுவதற்கு ஏற்பாடு செய்யாமல் எங்கேயோ போகிறேன் என்கிறாயே?"

"கட்டாயம் இன்று இராத்திரியே கிளம்பிவிடலாம். மாமா! ராத்திரி பத்து மணிக்குக் காரில் கிளம்பினால்,



அமரர் கல்கி

பலபலவென்று பொழுது விடியும்போது சிதம்பரம் போய்விடலாம். உங்களுக்குத் தூக்கம் விழிக்க வேண்டாமென்றிருந்தால் நீங்கள் வேணுமானா ராத்திரி ரயில் ஏறி விடுங்கள்" என்றான்.

இப்படிச் சொல்லிவிட்டு வெளியே போனவன் இனிமேல் சாயங்காலம்தான் திரும்பி வருவான் என்று நினைத்தேன். ஆனால் ஒரு மணி நேரத்துக்குள் அவன் திரும்பி வந்துவிடவே எனக்கு ஆச்சர்ய மாய்ப் போயிற்று.

"என்ன தம்பி! அதற்குள்ளே வந்துவிட்டாய்?" என்று நான் கேட்டதற்குப் பதில் ஒன்றும் சொல்லாமல், உள்ளே போய் படுக்கையை விரித்துப் படுத்துக் கொண்டான். சற்று நேரத்துக்கெல்லாம் அவன் விம்மி அழும் சத்தம் கேட்டது.

தம்பியுடன் சோக்ரா பையனும் போயிருந்தான். அவனைக் கூப்பிட்டு "என்னடா சமாசாரம்?" என்று விசாரித்தேன். அவன் எல்லா விவரமும் சொன்னான். ஸாந்தோமில் இருந்த மனோரஞ்சிதத்தின் பங்களாவுக்குப் போனார்களாம். வாசலில் ஏற்கெனவே ஐந்து ஆறு மோட்டார் வண்டிகள் காத்துக் கொண்டிருந்தனவாம். 'கும்பகோணம் சிவக்கொழுந்து பிள்ளை வந்திருக்கார்' என்று தம்பி சொல்லியனுப்பிச்சுதாம். வாசல் சேவகன் திரும்பி வந்து 'இப்போது அம்மாவுக்கு வேலை இருக்காம். பார்க்க முடியாதாம். இன்னொரு சமயம் வரச் சொன்னாங்க' என்று தெரிவித்தானாம். தம்பிக்கு முகம் அப்படியே சிறுத்துப்



போச்சாம். வண்டியைத் திருப்பச் சொல்லி நேரே ஜாகைக்கு வந்து விட்ட தாம்.

சாமி! இந்த விஷயம் எனக்கு ஆச்சர் யத்தை விளைவிக்கவில்லை. அந்தப் பெண் பிள்ளையை மதறாஸ்காரர்கள் தலையில் தூக்கி வைத்துக்கொண்டு கூத்தாடுகிறார்கள் என்று நான் கேள்விப் பட்டிருந்தேன். பெரிய பெரிய வக்கீல்கள் என்ன, ஹைகோர்ட் ஜட்ஜுகள் என்ன, ஐ.சி.எஸ். உத்தியோகஸ்தர்கள் என்ன இப்படிப்பட்ட சீமான்களெல்லாம் அவள் வீட்டு வாசலில் போய்க் காத்துக் கொண் டிருந்தார்களாம்! இப்படியெல்லாம் பெருமை வந்தால், நல்ல மனுஷ்யர் களுக்கே கர்வம் தலைக்கேறிப் போய் விடும். ஒரு சாதாரண பெண் பிள்ளைக் குக் கேட்க வேண்டுமா? கேவலம் ஒரு மேளக்காரனை அவள் மதிப்பாளா?

சிவக்கொழுந்தின் மேல் எனக்குக் கோபமாய் வந்தது. இவனுடைய வித்வத் எங்கே? அவள் எங்கே? அந்த அற்பப் பெண் பிள்ளை எங்கே? அவள் வீட்டை தேடிக்கொண்டு இவன் ஏன் போகிறான்? இந்த அவமானம் அவனுக்கு நன்றாய் வேண்டும்! அப்போதுதான் புத்தி வரும். அழட்டும் நன்றாய் அழட்டும்!

இப்படி எண்ணி, அவனை சமா தானப்படுத்துவதற்கு நான் போகவில்லை. எனக்குச் சில மனுஷ்யர்களை பார்க்க வேண்டியிருந்தது. அவர்களைப் பார்த்து விட்டு வரலாம் என்று வெளியே போய்விட்டேன்.

சாயங்காலம் ஐந்து மணி சுமாருக்குத் தான் திரும்பி வந்தேன். வந்ததும், தம்பியைப் பற்றி விசாரித்தேன். சுமார் நாலு மணிக்குத் தம்பி அறையிலிருந்து எழுந்து வந்ததாகவும், நான் எங்கே என்று விசாரித்ததாகவும் உடனே வண்டியில் ஏறிக் கொண்டு புறப்பட்டுச் சென்றதாக வும், தெரிந்தது. ரயிலில் ஏறி நாம் பாட்டுக்குப் போய்விடலாமா, தம்பி எப்படியாவது திண்டாடிக் கொண்டு வந்து சேரட்டும் என்று முதலில் நினைத்தேன். அப்புறம் இந்த மாதிரி நிலைமையில் அவனைத் தனியாக விட்டுவிட்டுப் போகக்



கூடாது என்று தோன்றிற்று. மனத்திலே என்னமோ திக்திக்கென்று அடித்துக் கொண்டது. ஒரு வேளை தம்பி வந்து சேராவிட்டால் நாளைக்குச் சிதம்பரத்தில் கச்சேரி என்ன ஆவது? அவன்தான் சிறு பிள்ளைத்தனமாக நடந்து கொண்டால், அதற்காக நாமும் அசட்டுத்தனமாகப் போகலாமா என்று நினைத்து, அவன் வரவுக்காகக் காத்திருந்தேன்.

சாயங்காலம் ஏழு மணிக்குத்தான் வாசலில் வண்டி வந்து நின்றது.

'மாமா வந்துட்டாங்களா?' என்று சிவக்கொழுந்து உற்சாகமாகக் கேட்டுக் கொண்டு உள்ளே நுழைந்தபோது 'போகிறது, பிள்ளைக்குப் புத்தி சரியாய்ப் போய்விட்டது போலிருக்கு' என்று நான் நினைத்துச் சந்தோஷப்பட்டேன். ஆனால் அந்த சந்தோஷம் ஒரு நிமிடங்கூட இல்லை. உள்ளே வந்த தம்பியைப் பார்த்தேனோ இல்லையோ, அவனுடைய உற்சாகத்துக்குக் காரணம் என்னவென்று தெரிந்து போய்விட்டது. அப்படியே என் மனம் இடிந்து போயிற்று.

'அடி பாவி! சண்டாளி! உன்னால் தானே விபரீதம் வந்தது!' என்று அந்த



நாடகக்காரியை மனத்திற்குள் திட்டி னேன். நான் அன்று சாயங்காலம் தம்பி யைத் தனியாய் விட்டு விட்டுப் போன தற்காக என்னையே நொந்து கொண் டேன். இப்போது நான் ரயிலில் போவது என்பது முடியாத காரியம். கூட இருந்து தம்பியை அழைத்துக் கொண்டுதான் போகவேண்டும்.

இந்த இடத்தில் கந்தப்ப பிள்ளை சொன்னது எனக்கு நன்றாய் புரிய வில்லை. எதையோ சொல்ல விட்டுவிட் டார் என்று தோன்றிற்று. "நீர் சொல்வது எனக்கு அர்த்தமாகவில்லை. ஐயா! அப்படி சிவக்கொழுந்தினிடம் என்ன மாறுதலைக் கண்டீர்?" என்று கேட்டேன்.

"தெரியவில்லையா, சாமி! அதைச் சொல்வதற்குக் கூட எனக்குச் சங்கடமா யிருக்கிறது. பையன் நன்றாகத் 'தண்ணி' போட்டுவிட்டு வந்திருந்தான்! அவ்வளவு தான். அனுமார் கோயிலிலே செய்த சத்தியம் போச்சு! மறுபடியும் 'சோக்ரா' பையனை விசாரித்தேன். சாயங்காலம் இன்னொரு தடவை அந்த நாடகக்காரி வீட்டுக்குப் போனதாகவும், அப்போதும் 'பார்க்க முடியாது' என்றே பதில் கிடைத்ததாகவும், இவர்கள் வாசலில் நிற்கும்போதே அவள் வெளியில் கிளம்பி வந்து மோட்டாரில் ஏறிக் கொண்டு போய்விட்டதாகவும், தம்பியைத் திரும் பிக்கூடப் பார்க்கவில்லையென்றும் 'சோக்ரா' சொன்னான். அதற்குப் பிறகு தம்பி கொஞ்ச நேரம் எங்கெல்லாமோ சுற்றி அலைந்துவிட்டுக் கடைசியில் சென்ட்ரல் ஸ்டேஷனுக்கு அருகில் வண்டியை விட்டுக் கொண்டு போயிற் றாம். நாசமாய்ப் போகிறவன்கள் தான் மதுபானக் கடைகள் வைத்திருக்கிறார் களே? சக்கைப் போடு போட்டுவிட்டு வந்து விட்டான்!

இதையெல்லாம் கேட்டபோது ஒரு புறத்தில் எனக்குத் தம்பியின் பேரில் கோபம் வந்தாலும், இன்னொரு பக்கம் இரக்கமாயுமிருந்தது. அவன் மனசு எவ்வளவு வேதனைப்பட்டிருந்தால், இந்த மாதிரி கோயிலில் செய்த பிரமாணத்தைக் கைவிட்டு மதுபானம் செய்யத் தோன்றி யிருக்கும்? பாழும் பெண் மோகத்தின் சக்திதான் என்ன? - போனது போகட்டும், இந்தத் தடவை எப்படியாவது பையனை ஜாக்கிரதையாய் ஊருக்குக் கொண்டு போய்ச் சேர்த்துவிட்டால், அப்புறம் கவலையில்லையென்று நினைத்தேன். 'இந்த நாடகக்காரிப் பைத்தியம் இத்துடன் இவனுக்கு விட்டுப் போயிற்று. பிறகு வனஜா இருக்கிறாள். பார்த்துக் கொள் கிறாள்!' என்று எண்ணி என்னை நானே தேற்றிக் கொண்டேன்.

சாப்பாடு எல்லாம் முடித்துக் கொண்டு கிளம்புவதற்கு இரவு பத்து மணி ஆகிவிட்டது. கம்பெனிக்காரர்கள் அனுப்பியிருந்த டிரைவர்தான் வண்டி ஓட்டிக் கொண்டு வந்தான். சிவக்கொழுந்து டிரைவருக்குப் பக்கத்தில் முன் ஸீட்டில் உட்கார்ந்தான். நாங்கள் எல்லாம் பின்னால் இருந்தோம். தம்பி வண்டி ஓட்ட ஆரம்பிக்காமலிருக்க வேண்டுமே என்று என் மனக நிக்திக் கென்று அடித்துக் கொண்டது. ஆனால் அவனிடம் அதைப்பற்றி நான் சொல்லவில்லை. சொன்னால், ஒரு வேளை 'குரங்கை நினைத்துக் கொண்டு மருந்து தின்னாதே!' என்று சொன்ன கதைபோல் ஆகிவிடலாமல்லவா? ஆகையால் வாயை மூடிக்கொண்டு இருந்தேன்.

அன்றிரவு வானத்தில் மப்பும் மந்தாரமுமாயிருந்தது. ஆனால் நாங்கள் கிளம்பும்போது மழை பெய்யுமென்று தோன்றவில்லை. செங்கற்பட்டு தாண்டுகிறபோதுதான் சிறு தூற்றல் போட்டது. அப்போது ஆகாயத்தைப் பார்த்தேன். ஒரே காடாந்தகாரமாயிருந்தது. பெரு மழை பிடித்துக் கொள்ளாமலிருக்க வேண்டுமேயென்று கவலைப்பட்டேன்.

இப்படி எண்ணிச் சற்று நேரத்துக்கெல்லாம் நான் கண்ணசந்திருக்க வேண்டும். எவ்வளவு நேரம் தூங்கினேனோ தெரியாது. பெரிய இடிச்சத்தத்தைக் கேட்டு தூக்கி வாரிப்போட்டுக் கொண்டு எழுந்திருந்தேன்.

ஆஹா! அந்த மாதிரி மின்னலையும் இடியையும் என் ஜன்மத்தில் நான் பார்த்தது கிடையாது. அந்த இடிச் சத்தமானது ஆகாயத்தில் எங்கேயோ ஒரு மூலையில் கிளம்பி, மேகங்களைக் கிறிப் பிளந்துகொண்டு, ஆகாயத்தின் இன்னொரு மூலைக்குப் பிரயாணம் செய்வது போலிருந்தது. அதுவும் சட்டென்று அவசரமாய்ப் போய்விடவில்லை. அண்டகடாகங்களையெல்லாம் கிடுகிடுவென்று நடுங்கச் செய்துகொண்டு நிதானமாகப் பிரயாணம் செய்தது. அதே சமயத்தில் பளீரென்று மற்றொரு மின்னல் கிளம்பிற்று. கோடி சூரியன் ஒரே சமயத்தில் கிளம்பினால் எப்படியிருக்கும்? அவ்வளவு பிரகாசமான மின்னல், அரை நிமிஷம் நின்று உலகத்தை ஜகஜ் ஜோதியாகச் செய்தது. அந்த ஜகஜ் ஜோதியின் வெளிச்சம் தாங்காமல் என் கண்கள் மூடிக் கொண்டன. ஆனால் அப்படி மூடிக் கொள்வதற்குள், என் வயிற்றில் நெருப்பைக் கட்டும்படியான காட்சியைப் பார்த்துவிட்டேன் சாமி. எனக்கு முன்னால் டிரைவரின் ஸீட்டில் உட்கார்ந்து சிவக்கொழுந்து வண்டி ஓட்டிக் கொண்டிருந்தான்.

'ஐயோ! விபரீதம் வரப்போகிறதே!' என்று என் மனத்தில் மின்னலைப் போல் ஒரு எண்ணம் தோன்றியது. அவ்வளவுதான். விபரீதம் வந்துவிட்டது! அந்த ஒரு வினாடியில் நேர்ந்த சம்பவங்களை எப்படி நான் உங்களுக்குச் சொல்லப் போகிறேன்? படீர் என்று ஒரு பெரிய பயங்கரமான சத்தம்; என் ஜன்மத்தில் அந்த மாதிரி சத்தத்தை நான் கேட்டதே இல்லை; இனிமேல் கேட்கப் போகிறதுமில்லை. ஆகாயம் அப்படியே இடிந்து திடீரென்று நம் தலையில் விழுந்தால் எப்படியிருக்கும்? அப்படித்தான் தோன்றிற்று. அந்தப் பெரும் சத்தத்தினால் என் காது செவிடானது ஒரு வினாடி, அடுத்த வினாடியில் ஒரு பெரிய அதிர்ச்சி; பூலோகத்திலிருந்து என்னை யாரோ தூக்கிப் பாதாளத்தில் எறிவது போலிருந்தது.

(தொடரும்)

## வாத்து... பூனை... மிக்கி மௌஸ்...

### பக்தை

தீவிர சிவன் பக்தையான ரேவதிப்ரியா, பிரதோஷ நாட்களில் வீட்டுக்கு அருகிலிருக்கும் கோவிலில் ஆஜராகி விடுகிறார்.

### மாறியாச்சு

கோலங்கள் சீரியலில் அபிஷேக்கின் தங்கையாக நடித்தவர் மாற்றப்பட்டு, அவருக்குப் பதிலாக ப்ரியதர்ஷினி நடிக்கிறார்.

### பயம்

பேய் மற்றும் அது தொடர்பான செய்திகள் என்றாலே நீலிமாராணிக்கு செம அலர்ஜி.

### நோ என்ட்ரி

ஒரு முக்கியமான காட்சியை, நிருபர் ஒருவர் ஷூட்டிங்



• ப்ரஜன்

### செல்லம்

சன் மியூஸிக் காம்பியரர்கள் ஒருவருக்கொருவர் செல்லப் பெயர் வைத்துக் கொண்டு, அந்தப் பெயரிலேயே செல் நம்பரை ஸ்டோர் செய்து வைத்திருக்கிறார்கள். ஹேமா சின்ஹாவுக்கு வாத்து (Duck) ப்ரஜினுக்கு பூனை (cat), ஆனந்தக்கண்ணனுக்கு மிக்கி மௌஸ் என்று பட்டியல் நீள்கிறது.

### அமைதி

ஷூட்டிங் ஸ்பாட்டில் ஷாட் முடிந்தவுடன் யாருடனும் அதிகம் பேசாமல் அமைதியாக லாப்டாப்பில் மூழ்கி விடுகிறார் பிரேம் சாய்.



• நீலிமாராணி



• பிரேம்சாய்

ஸ்பாட்டிலே பார்த்துவிட்டு, ஒளிபரப்பாகும் முன்பே செய்தி வெளியிட்டதை அடுத்து,

# சன் மியூஸிக்!

'கோலங்கள்' திருச்செல்வம் நிருபர்களை செட்டுக்குள் அனுமதிப்பதில் தயக்கம் காட்டுகிறார்.

## அதேபெயர்

மறைந்த திரைப்பட தயாரிப்பாளர் ஜீ.வி.யின் நிறுவனமான ஜீ.வி. பிலிம்ஸை வேறு நபர்கள் வாங்கி, பெயரை மாற்றாமல், அதே பெயரில் தற்போது சீரியல் எடுக்கத் துவங்கியுள்ளனர். அவர்களது முதல் சீரியலை இயக்குபவர் நாகா.

• ரேவதி ப்ரியா



## ரெடி

ஆளுங்கட்சியின் ஆதரவுத் தொலைக்காட்சி அலுவலகம், முன்புற பாதுகாப்புச் சுவர்களெல்லாம் எழுப்பப்பட்டு, அசத்தலாக ரெடியாகி வருகிறது. (எலக்ஷன் ஃபீவர்?)

## டிஷ்யூம்

எபிசோட் முடிந்த பிறகு போடப்படும் டைட்டிலில் 'காஸ்ட்யூம் ஸ்பான்சர்' பெயர் சிலருக்கு மட்டுமே போடப்படுகிறது. இதில், 'என் பெயரையும் போடு... ஏன் அவள் பெயரைப் போட்டீர்கள்' என்று நட்சத்திரங்களுக்குள் சம்பகாலமாக ஒரே டிஷ்யூமாக இருக்கிறது.

• ஹேமாசின்ஹா

## தடா

தீபாவளி, பொங்கல் போன்ற விசேஷ தினங்களில் மட்டும் தனது ரேடியோவில் எவ்விதச் சிறப்பு நிகழ்ச்சிகளையும் நடத்த வேண்டாம்... ஆர்டினரியாக நடத்தினாலே போதும் என்று அதன் நிகழ்ச்சித் தயாரிப்பாளர்களுக்கு ரகசிய உத்தரவிட்டுள்ளதாம் சூரிய சேனல். ரேடியோ நிகழ்ச்சிகள் சேனல் ரசிகர்களை ஈர்த்துவிட்டால், சேனலுக்கு ஏதாவது சேதாரம் வந்து விடும் என்ற பயமோ?

• முராரி

படங்கள்:
**ஸ்ரீஹரி, முகில்**

இனிக் கலைஞரையும் அம்மாவையும் நீங்கள் அடிக்கடி மேடையில் பார்க்க வேண்டியிருக்கும். இருவரது மேடையிலும் தவறாமல் இடம் பெறும் சில அம்சங்கள் மட்டும் இங்கே தரப்பட்டுள்ளன. இதையும் தாண்டி... ஆயிரம் வித்தியாசங்கள் இருக்கின்றன. அவற்றை அந்தந்த மேடைகளைப் பார்த்துக் குறித்து வைத்துக் கொள்ளுங்கள்.

## கலைஞர் மேடை

1. அனைத்து நாற்காலிகளும் ஒரே மாதிரி இருக்கும். சிறிதும் பெரிதுமாக இருந்தால் கூட்டணித் தம்பிகள் கோபித்துக் கொள்ளக் கூடாதல்லவா?

2. அப்போது, கூட்டணிக்குள் இருக்கும் கட்சிகளின் எண்ணிக்கைகளைப் பொறுத்து நாற்காலிகளின் எண்ணிக்கை மாறும். இப்போதைக்கு ஏழு நாற்காலிகள் இடம் பெறுகின்றன.

3. கண்டிப்பாகத் தயாநிதிமாறன் மேடையில் நின்று கொண்டு கலைஞருக்குத் தமிழிலும், வந்திருக்கும் டெல்லித் தலைவருக்கு ஆங்கிலத்திலும் மொழிபெயர்த்துக் காதைக் கடித்துக் கொண்டிருப்பார்.

4. வயதெல்லாம் முக்கியம் கிடையாது. எத்தனை




* படம் : ஸ்ரீஹரி



## ஜெயலலிதா மேடை

1. மேடை முழுக்க மைக், நாற்காலி, தம்ளர், டேபிள் என்று அனைத்துமே பச்சை மயமாக இருக்கும். தண்ணீர்கூட பச்சைத்தண்ணிதான்.

2. அம்மாவுடைய நாற்காலி மட்டும் ராஜாதிராஜ... ரேஞ்சுக்கு இருக்கும். அந்த நாற்காலிக்கு மட்டும் ஸ்பெஷல் கார்பெட் போடப்பட்டிருக்கும். மற்ற நாற்காலிகள் கொஞ்சம் நன்றாக இருந்தாலும் மற்றவர்கள் உட்காரமாட்டார்கள்.

3. அம்மா மேடைக்கு வருவதற்குத் தனி வழியும், மற்றவர்கள் வருவதற்கு மற்றொரு வழியும் இருக்கும். அம்மா வரும் வழியை பயபக்தியுடன் தொட்டுக்கும்பிட்டு விட்டுச் செல்வார்கள்.

4. மேடையில் கண்டிப்பாகக் குட்டிக்கதை ஒன்று ரத்தத்தின் ரத்தங்களுக்குக் கூறப்படும். கதையில், தொண்டர்களின் பலத்த விசிலுக்கு இடையே கலைஞர் மீது கடுமையாக அர்ச்சனை செய்யப்படும்.

5. அம்மாவுடைய நாற்காலியின் இருபுறங்களிலும், இரண்டு நாற்காலிகள் போடுமளவுக்கு இடம் விடப்பட்டு அந்த இடத்தில் டீபாய்கள் போடப்பட்டிருக்கும்.

6. அம்மாவுக்கு ஒருபுறம் பொன்னையனும் இன்னொரு புறம் ஓ.பன்னீர் செல்வமும் தூரத்தில் அமர்ந்திருப்பார்கள். ஓ.பி.எஸ். மட்டும் அமைதிப்படை அமாவாசை ரேஞ்சுக்கு நுனி நாற்காலியில் உட்கார்ந்திருப்பார். சில சமயங்களில் டீபாய்க்கு பக்கத்தில் காளிமுத்து இடம் பிடித்துவிடுவார்.

7. ஏனைய அமைச்சர்களும் மற்ற ரத்தங்களும் நெடுஞ்சாண் கிடையாக விழுந்து அம்மாவிடம் ஆசிர்வாதம் வாங்குவர். சிலர்

சீட் கைவசம் இருக்கிறது என்பதை வைத்துத்தான் மேடையில் எத்தனையாவது இடம் என்பது முடிவு செய்யப்படும்.

5. அப்துல்கலாம் என்ன, அந்த ஆண்டவனுக்கே பாராட்டு விழா நிகழ்ந்தாலும் மேடையில் பேசுபவர்கள் கலைஞரையே அதிகம் புகழ்ந்து பேசுவார்கள்.

6. நிச்சயம் வைரமுத்துவோ, வாலியோ கலைஞரைப் புகழ்ந்து கவிதை வாசிப்பார்கள். இந்த அணியில் பா.விஜயும் சேர்ந்திருக்கிறார்.

7. துரைமுருகனும் ஆற்காடு வீராசாமியும் வேலை செய்கிறார்களா இல்லையா என்று தெரியாது. ஆனால், வேட்டியை மடித்துக் கட்டிக்கொண்டு கலைஞருக்கு முன் அங்கும் இங்கும் நடந்து கொண்டிருப்பார்கள்.

8. அவ்வப்போது வித்தகக் கவி, விஞ்ஞானக் கவி என்று பட்டத்தை அள்ளி விடுவார் கலைஞர். பயபக்தியுடனும் இலேசாகக் கண்கலங்கியபடியும் வந்து கலைஞரிடம் ஆசீர்வாதம் வாங்கிக்கொள்ள வேண்டும்.

9. கலைஞருக்கு மட்டும் மஞ்சள் நிற சால்வை அணிவிக்கப் படும். அது பகுத்தறிவின் நிறமா, சும்மா பளிச்சிடும் நிறமா என்றெல்லாம் கேட்கக் கூடாது.

10. இலக்கிய மேடையாக இருந்தாலும்கூட பலத்த கரகோஷத்துக்கிடையே 'எங்கள் கூட்டணி நாற்பதுக்கு நாற்பது மார்க் வாங்கிய வலிமையான கூட்டணி' என்று பிரகடனம் செய்யப்படும்.

11. கலைஞர் ஏதாவது ஒரு சம்பவத்தை நினைவு கூர்வார். அதைக் கேட்டு துரைமுருகன், கோவை ராமநாதன், வைகோ உள்ளிட்ட தம்பிகள் வெம்பி வெடித்து அழுவர். அப்போது மேடையில் 'பின்ட்ராப்' சைலன்ஸ் சோக ஷெனாய் வாசிக்கும்.

**கலை**

பக்திப் பரவசத்தில் கன்னத்தில் போட்டுக்கொள்வர்.

8. ஒன்பதின் மடங்கில் பச்சை நிற திரையில் மூடப்பட்ட பச்சைப் பசேல் கல்வெட்டுகள் திறந்து வைக்கப் படும்.



# ...அம்மா_

9. அம்மாவைப் புகழ்ந்து காங்கிரஸ்காரர் ஒருவர் பேசுவார். பின்னர் அவர் மேலிடத்திற்கு விளக்கம் தருவார். அல்லது அம்மாவை எதிர்த்துப் பேசுவார். பின்னர் அவர் அ.தி.மு.க. வினரால் அடுத்த மாநில எல்லை வரை துரத்தியடிக்கப் படுவார்.

10. "பப்பர்மின்ட் முதல் பால் பாக்கெட் வரை எல்லாமே இலவசமாகக் கிடைக்க நான் ஆணையிட்டுள்ளேன்" என்ற ரீதியில் ஏதாவது அடித்துவிடுவார்.

11. மத்திய அரசின் போக்கைக் கடுமையாகச் சாடுவார். அதே மேடையில் தமிழக அரசின் நலத் திட்டங்களுக்கு நிதியுதவி கேட்பார். இரண்டுக்குமே கரகோஷம் விண்ணைப் பிளக்கும்.

# ...ஆயிரம் வித்தியாசங்கள்!

# எல்லா கலர் பாராட்டும் ஜோவுக்கு மட்டும்!

'தவமாய் தவமிருந்து' கதையும் 'ஜூன்-ஆர்' கதையும் கிட்டத்தட்ட ஒரே மாதிரி. அதனால் சேரன் படம் ரிலீஸான பிறகு என் படம் வெளிவரும்'' என்கிறார் ஜூன்-ஆர் படத்தின் இயக்குனர் ரேவதி எஸ். வர்மா. "சரி, படத்தைப பற்றிச் சொல்லுங்கள்'' என்றால் "அதைவிட என் கதாநாயகியிடம் பிரமித்ததை உங்களிடம் ஒப்பித்து விடுகிறேன்'' என்று நம்மீது, 'ஜோ' என பாராட்டு மழை பொழியத் தொடங்கிவிட்டார்.

• ஜோதிகாவோட கதை அறிவு பிரமாதம். முதல்ல நாங்க ஜூன்-ஆர். படத்தை ஹிந்தியில எடுக்கறதாதான் இருந்தோம். ஆனா ஜோதான் 'இல்லையில்லை. வித்தியாசமான படங்களை ரசிக்கறதுல தமிழ் ரசிகர்களை யாரும் அடிச்சுக்க முடியாது. தமிழ்லேயே எடுங்க' என்று ஆலோசனை வழங்கினார். அதேபோல சமீபகாலமாக நல்ல கதை கிடைக்கும் சந்தர்ப்பத்தில் அதைத் தயாரிக்கவும் முன் வருகிறார்.

• 'சந்திரமுகி'யில் ஜோதிகாவின் நடிப்பை, தமிழ்நாடே



• ரேவதி வர்மா



உச்சிமுகர்ந்த அந்த உருட்டுவிழியைப் பார்க்கணுமே! 'ரேவதி, கடவுளோட கருணையைப் பார்த்தீங்களா, யாருக்கோ போயிருக்க வேண்டிய பேரையும் புகழையும் என் பக்கம் திருப்பி விட்டிருக்கார்'ன்னு சொல்லிச் சொல்லி மகிழ்ந்தார்.

• இவர் தொழில் பக்தியைப் பார்த்து உருகாதவங்களே இருக்க முடியாது. 'ஜூன் ஆர்'க்காக நாலு நாள் இடைவிடாது மழையில் நனைந்து நடித்துக் கொடுத்தார். அதேபோல ஒருமுறை நடனம் ஆடும் போது காலில் அடிபட்டு ரத்தம் வர ஆரம்பித்துவிட்டது. வேறொரு நடிகையாக இருந்திருந்தால் படப்பிடிப்பு பேக்-அப் ஆயிருக்கும். 'ஓ.கே., கேரி ஆன்' என்று காலில் பேண்டேஜ் போட்டு நடிக்க ரெடியாகிவிட்டார். சினிமாவில் இதெல்லாம் அதிசயம்.

• இன்றைக்கு எத்தனை இளம் தமிழ் பெண்கள் தமிழில் பேச முற்படுகிறார்கள். ஆனால் வட இந்தியப் பெண்ணான ஜோதிகா அற்புதமாகத் தமிழ் பேசுவார். ஏன், தமிழைப் படிக்கவும் கற்றுக் கொண்டிருக்கிறார்.

• பார்க்கத்தான் தைரியமான பெண். ஆனால் ரோஜா இதழ்களைவிட மென்மையான மனசு. ஒரு சின்ன விஷயத்துக்குக் கூட கண் கலங்கி விடுவார். அவரைச் சமாதானப்படுத்துவதற்குள் போதும் போது மென்றாகிவிடும் - என்று ஜோதிகா தலையில் பெரிய ஐஸ் கட்டியை வைத்தார்.

**- ச.ந.கண்ணன்**

அங்கங்க வெள்ளம் வந்து, கொள்ளை சந்தோசம் கொடுக்குற தீபாவளியை கொள்ளை அடிச்சிட்டுப் போயிடுச்சு! அட போனாப் போகுது, அடுத்த வருஷம் சேர்த்துக் கொண்டாடிக்கலாம்னு நெனைச்சா, 'இச்சு தா! இச்சு தா'ன்னு என் நெஞ்சைப் பிச்சுப் பிச்சுத் தின்ன கஸ்தூரிமான் மீரா ஜாஸ்மின், 'அடுத்த வருஷம் எனக்குத் தலை தீபாவளி'ன்னு சொல்லி எனக்கு எஸ்.எம்.எஸ். அனுப்புது! நொந்துபோயிட்டேன்! 'கனா கண்டேன்'ல கலக்கலா வில்லத்தனம் பண்ணுன பிரித்விராஜ்தான் மீராவைக் கல்யாணம் கட்டிக்கிட்டு வாழ்க்கையை 'ரன்'னப் போறாராம். மீராவோட காட்ஃபாதர் டைரக்டர் லோகித தாஸ் பர்மிஷனுக்காக வெயிட்டிங்காம்! காதல் பிசாசே... எங்கிருந்தாலும் வாழ்க!




# காதல் பிசாசுக்குக் கல்யாணம்!

ஆந்திர ரயில் விபத்துல ஒரு கல்லூரி மாணவரோட உசிரைக் காப்பாத்தியிருக்கு கொசு! எப்படி? ரிசர்வேஷன் கோச்ல பயணம் செஞ்சுக்கிட்டிருந்த முரளி கிருஷ்ணாவுக்கு கதவோரம் சீட் கொடுத்திருந்தாங்களாம்! செம கொசுக்கடியாம்! தூக்கமே வராததால, ரயில் கதவைத் தொறந்து வெச்சிக்கிட்டு, காத்து வாங்கிக்கிட்டே வந்திருக்காரு! அதான் ரயில் பெட்டி தண்ணிக்குள்ள விழுந்த சமயத்துல பெட்டிக்குள்ள மாட்டாம, வெளிய குதிச்சுத் தத்தளிச்சுக்கிட்டிருந்துக்காரு! ரெண்டு மணி நேரம் கழிச்சு கிராம மக்கள் காப்பாத்தியிருக்காங்க! இனி 'உங்க குலதெய்வம் யாரு'ன்னு முரளிகிட்ட கேட்டா, சந்தோஷமா 'கொசு'ன்னு சொல்லுவாருங்கோ!

உலகத்துலயே மிகப்பெரிய கெடிகாரம் லண்டன்ல உள்ள பிக்பென் கெடிகாரம். அது போன வாரத்துல ஒரு நாள் ரிப்பேர் ஆயிடுச்சு! காரணம் தட்ப வெப்பநிலை மாற்றம்தானாம்! அப்புறம் சரி பண்ணிட்டாங்க! பழையபடி ஒழுங்கா ஓட ஆரம்பிச்சுடுச்சு! நல்ல வேளை அந்தக் கெடிகாரம் நம்ம ஊர்ல இல்ல! இருந்தா, அது நின்ன உடனே, 'நேரம் சரியில்ல! ஆட்சிக்கு ஆபத்து!'ன்னு எதையாவது கௌப்பிவுட்டு கெடிகாரத்தையே 'கெட்-அவுட்'ஆக்கியிருப்பாங்க! 'கெடிகாரம் நின்று போன பலன்கள்'னு எல்லா ஜோசியக்காரய்ங்களும் எழுத ஆரம்பிச்சிருப்பாய்ங்க! என்ன நாஞ் சொல்லுறது!

தென் அமெரிக்காவுல இருக்காரு டிமாம்பா சாக்கே! யூனிவர்சிட்டியில சேர்ந்து படிக்கறதுக்காக நுழைவுத் தேர்வு முதல் தடவை எழுதுனாரு. கிடைக்கல! இப்பத் திரும்ப எழுதியிருக்காராம்! இதெல்லாம் ஒரு நியூசான்னு நெட்டி முறிக்காதீங்க மக்கனே! டிமாம்பாக்கு இப்ப 84 வயசு. 66 வருசத்துக்கு முன்னாடி முதல் தடவை நுழைவுத் தேர்வு எழுதுனாராம். கிடைக்கல! அப்புறம் வேலை... வேலை... வேலைன்னு இப்பத்தான் ஓய்வு கெடைச்சுதாம்! அதான் பல்போன வயசுல பல்கலைக்கழகத்துக்குப் படிக்கக் கௌம்பிட்டாரு! எப்படி!

# புலியைத் தடுக்கும் அவர்!



டெண்டுல்கர் காயம், கோச் மாற்றம், கங்கூலி - சேப்பல் கசமுசா, தூசு, புகை அனைத்தும் விலகி, இப்பொழுதுதான் பளிங்கு போல் 'பளிச்'சென்றிருக்கிறது இந்திய கிரிக்கெட் அணி. தோனி, ரைனா, ராவ் என்று இளங் குருத்துகள் முன்நின்று வழி நடத்த, இலங்கை அணியின் தலைமேல் ஏறி நின்று கபடி ஆடியிருக்கிறது இந்திய கிரிக்கெட் அணி. கடந்த ஒரு மாத காலமாக இந்திய அணியில் ஏற்பட்டிருக்கும் மாற்றங்களுக்கான காரண கர்த்தாவாக விளங்குபவர் - ராகுல் டிராவிட்.

கங்கூலி, ஜாகிர்கான், கும்ப்ளே, நெக்ரா, பாலாஜி, லக்ஷ்மண் என்று முன்னணி வீரர்கள் எவருமில்லை. பெரிதாக இவர் மட்டும் என்ன சாதித்து விடப் போகிறார் என்ற கேள்விகளுக்கு, புதுமுகங்களை முன்னிறுத்தியே வெற்றியைத் தொட்டுள்ளார். 'இந்தியா வின் சினச்சுவர்' டிராவிட். (இத்தனை வருடங்களாக டெண்டுல்கர், கங்கூலியின் ஆளுமையால் ஓரங் கட்டப்பட்டிருந்தவராச்சே!)

இனி கங்கூலியின் நிலைமை அதோ கதிதான். தன்னை யாரும் அசைக்க முடியாது என்று இறுமாப்புடன் இருந்தார். ஜிம்பாப்வேயுடன் நூறு அடித்ததைச் சாக்காக வைத்து, 'என்னை டீமிலிருந்து வெளியேறச் சொன்னார்கள் தெரியுமா?' என்று நர்ஸரி பேபி போல் பத்திரிகையாளர்கள் முன்பு மூக்குச் சிந்தினார். இன்று டிராவிடின் தலைமையை ஒருவரும் குறை சொல்ல முடியாதபடி, ஒரே தொடரில் தன் முத்திரையைப் பதித்துவிட்டார். 'மேற்கிந்திய தீவில் நடக்கவிருக்கும் உலகக் கோப்பை வரை டிராவிட்தான் கேப்டன்' என்று அடித்துச் சொல்கிறார்கள் முன்னாள் இந்திய கேப்டன்கள்.

அதேசமயம் கங்கூலியை ஒரேயடியாகக் கை கழுவவும் போர்டு தயாராக இல்லை என்று தெரிகிறது. ஆனால் ஒரே சங்கடம், இனி அவர் டிராவிட் தலைமையின் கீழ்தான் ஆட வேண்டி வரும். இவ்வாறு பெங்கால் புலியின் வயிற்றில் பெங்களூர் புளியைக் கரைக்கப் போகிறார்களாம்.

இந்தக் கட்டளைக்குக் கட்டுப்பட்டு, புலி பாயுமா அல்லது பதுங்குமா?

வெயிட் அண்ட் ஸீ!

-செந்தில்

அழைப்பு மணி விட்டு விட்டு மூன்று முறை அடித்தது. கஸ்தூரி, எரிச்சலுடன் படுக்கையை விட்டு எழுந்தாள்.

விளக்கைப் பொருத்தி, சுவர்க் கடிகாரத்தைப் பார்த்தாள்.

மணி பத்து.

கலைந்த கூந்தலை, முடிந்து கொண்டே, போய் கோபமாகக் கதவைத் திறந்து போட்டுவிட்டுத் திரும்பினாள்.

சமையலறைக்குள் போனாள்.

"தலையெழுத்து... நிம்மதியா தூங்கமுடியறதில்லே. என்னமோ வெளியில வெட்டி முறிக்கிறது போலத்தான். ஒரு நாளைப் போல பத்து மணிக்குமேல வீடு திரும்பறது. கடனேனு அப்படி வீட்டுக்கு வரலைனா தான் என்ன? வெளியிலயே தங்கிக் கறது. யாரு கேட்கப் போறா... பொண்டாட்டினு ஒருத்தி இருக்காளேங்கற நினைப்பு இருக்கணும் மனசுல."

என்று புலம்பியபடி, சாப்பாடைக் கொண்டு வந்து 'டைனிங்' டேபிள் மீது 'டொக் டொக்'கென்று வைத்து விட்டு போய்க் கட்டிலில் விழுந்தாள்.

"பேசாம, நைட்ஷிப்ட் வேலையா பார்த்துக்கறது. ராத்திரி பூரா வீடு திரும்பலேன்னாலும் கவலையில்ல பாரு. வயிறு பத்திக்கிட்டு வருது. வேண்டா வெறுப்பா அப்படி யென்ன சம்சாரம் வேண்டிக் கிடக்கு..." என்று எழுந்து உட்கார்ந்தபடி எட்டிப் பார்த்தாள்.

ர ா ஜ ன்



உள்ளே வந்து உடை மாற்றிக் கொண்டு, கை, கால் அலம்பிக் கொண்டு, தானே போட்டு சாப்பிட்டுக் கொண்டிருந்தான்.

"அதானே. நான் கிட்டே வந்தாலே ஆகாதே. தானே போட்டுத் திங்கற ஆசாமி, நாளைலருந்து தானே சமைச்சிக்கிறது. அது ஒண்ணுக்காகத் தானே என் தயவு வேண்டியிருக்கு. வாய் திறந்து கூப்பிட்டால் குறைஞ்சிருமோ..." என்று எழுந்து வந்தாள்.

"அங்கங்கே ஆம்பளைங்க, அஞ்சு மணிக்கு ஆபீஸ் முடியுதுன்னா. நாலே முக்காலுக்கே வீட்டுக்கு வந்துடறாங்க. இங்கயும் ஆபீஸ்தானே... அஞ்சு மணிக்குத்தானே முடியுது... ஆறு மணிக்காவது வந்து சேரலாமில்ல. நான் பிடுங்கறேனா..."



# புலம்புகிறாள் ஒரு பெண்டாட்டி!

சோற்றைக் கொட்டி, குழம்பைக் கொட்டி ரகளை பண்ணினாள்.

ராஜன், கஸ்தூரியை ஏறிட்டுப் பார்த்தான்.

ஏதோ பேச வந்தவன், வாய் மூடிக் கொண்டான்.

"ஏன்... என்கிட்டே பேசறதில்லேனு தீர்மானமா..."

"தூக்கம்னு சொன்னியே..."

"அடடா என் கரிசனமே. அதனால தான் ஒரு நாளைப் போல தினமும் அர்த்த ராத்திரிக்கு வந்து கதவைத் தட்டறீங்களோ..."

"பத்து மணி உனக்குப் பாதி ராத்திரியா. வெளியில பாரு. வீட்டு வீட்டுக்கு டீ.வி.ல சீரியல் பார்த்துக்கிட்டிருக்காங்க. நீதான் அதிசயமான பொம்பளை. டீ.வி.யும் பாக்கறதில்ல. புஸ்தகம் படிக்கறதில்ல. இலக்கியம் தெரியாது. சங்கீதம் தெரியாது சாப்பாட்டைத் தவிர வேற ஒண்ணுலயும் ரசனை இல்லை. பொழுது இருட்டினால் உடனே தூங்கணும். கும்பகர்ண வம்சம். ச்சே..." என்று கோபித்துக் கொண்டு, பாதி சாப்பாட்டில் கை கழுவிக் கொண்டான்.

"வெளியில சாப்பிட்டு, இங்கேயும் சாப்பிடணும்னா முடியுமா? கை கழுவ ஏதோ ஒரு சாக்கு..."

"கடவுளே" என்று தலையில் அடித்துக் கொண்டான்.

"இதுக்குத்தான்... எனக்கு வீட்டுக்கு வரவே தோன்றதில்லை. ஏன்டி படுத்தறே. ஒரு நாளாவது... கல்யாணமான இந்த மூணு வருஷத்துல ஒரு நாளாவது, என்கிட்ட சண்டை பிடிக்காம இருந்திருக்கியா?"

"அதைத்தான் நானும் கேட்கறேன். ஒரு நாளாவது, சரியான நேரத்துக்கு வீட்டுக்கு வந்ததுண்டா? சொல்லுங்க பார்ப்பம்."

"அவள் கேட்கறதும் சரிதான். குடிகாரன் மாதிரி நான் ஒவ்வொரு நாளும் லேட்டா வீட்டுக்குப் போறேன். ஒரு நாள் இல்லாவிட்டால் ஒரு நாள் கோபம் வரத்தான் செய்யும். நான் என்ன பண்றது. எனக்குப் பைத்தியம். தினமும் சாயங்காலம் ஆச்சுதுன்னா கச்சேரி எங்கே, நாடகம் எங்கே, கூட்டம் எங்கே, கண்காட்சி எங்கேன்னு கால்கள் தேடிக்கிட்டு ஓடுது. கல்யாணத்தின்போதே தெளிவாய்ச் சொல்லியிருந்தேன். 'நான் கவிஞனுமில்லை, இசைக் கலைஞனுமில்லை. ஆனால், அதன் பேரில் எனக்கொரு மயக்கம் உண்டு. இசைக்கச்சேரி, நாடகம், இலக்கியக் கூட்டம்னு சிட்டியில எது நடந்தாலும் ஓடிருவேன். அதனால் ராத்திரில வீடு திரும்பக் கொஞ்சம் முன்ன பின்ன ஆகும். இதை ஒரு குற்றமா எடுத்துக்கக் கூடாதுன்னு..' 'ஆஹா... கலைஞனை விட ரசிகன் உயர்ந்தவன். ரசனை உயர்ந்தது. இதுல ஆட்சேபிக்க என்ன இருக்கு. நல்ல விஷயம்தான். அதெல்லாம் என் மகள் அட்ஜஸ்ட் பண்ணிக்குவான்'னாரு மாமனார்..." கவலைப்பட்டான் ராஜன்.

"கல்யாணத்தின்போது பரஸ்பரம்

---

''மணமக்களை அவர் புதுமையா வாழ்த்தினாரா எப்படி?''

''செல்லும் கையும் போல பிரியாமல் வாழச் சொன்னார்!''

- லீலாஜி



பெண்கள் ஆறுதலடைய ஒரு நியூஸ்! மார்பகப் புற்றுநோய்க்கான சிறந்த மருந்தாக ஹெர்செப்டின் (Herceptin) டெக்ஸாஸ் மருத்துவர்களால் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளது. இந்த மருந்து புற்று நோயை முற்றிலுமாகப் போக்கும் என்று சொல்லமுடியாவிட்டாலும், இதனால் ஏற்படும் பக்க விளைவுகள் மிகக் குறைவாம். Rx




கொடுக்குற வாக்குறுதிகளை அப்போதைக்கப்போது மறந்துடணும் ராஜன். கல்யாணம் நடக்கணுமேனு கொஞ்சம் முன்னபின்ன தலையாட்டிக் கறதுதான். மாப்ள ஏதோ ஆர்வத்துல சொல்றாரு. கல்யாணத்துக்குப் பிறகு, எல்லாரையும்போல வீட்டையே சுத்திச் சுத்தி வருவாருனு நினைச்சிருக்கலாம்...'' என்றான் நண்பன் கோகுல்.

"அதுக்கு நானா பொறுப்பு...''

''சரி... கஸ்தூரியும்தான் என்ன பண்ணுவாள். அவள் ரசனையெல்லாம் அடுப்பங்கரையோடு நின்னுட்டுது. அதுவும் வாழ்க்கைக்கு அடிப்படையான விஷயம்தானே. பகல் பொழுது. எப்படியோ ஓடிடுது. ராத்திரில கொட்டு கொட்டுனு உனக்காகக் காத்திருக்கறது. கஷ்டமாத்தானே இருக்கும். துணைக்கும் யாருமில்லே. காலாகாலத்துல குழந்தை பெத்திருந்தாலாவது. தனிமையில் இல்லாமல் குழந்தையோடு கொஞ்சிக் குலாவி நேரம் போகும். நீ கொஞ்சம் நாளைக்கு இந்த வெளி விவகாரங்களையெல்லாம் விட்டுட்டு நேரத்துக்கு வீட்டுக்குப் போ. இப்படித் தாமதமாகப் போய், அவளை எரிச்சல்படுத்தி, சண்டைபோட வச்சுக்கிட்டிருந்தால் அதுவே பழக்கமாகி, ஒரு வியாதியாகவும் மாறிடப்போவுது...''

"பயமுறுத்தாதே...''

''அப்படியெல்லாம் நடந்திருக்கு. அதை வச்சுதான் சொல்றேன்...''

ராஜன், அன்று மாலையில், அவனுக்குப் பிரியமான பாடகரின் கச்சேரி - ஓசி. டிக்கெட் கிடைத்தும் - தவிர்த்துவிட்டு ஆறு மணிக்கெல்லாம் வீடு வந்து சேர்ந்தான்.

கஸ்தூரி கடிகாரத்தைப் பார்த்தாள். ஆறு மணியைக் காட்டியது, கடிகாரம்.

எரிச்சல் வந்துவிட்டது அவளுக்கு.

"வீட்ல மனுஷன் சரியாயிருந்தால் தானே மத்தது சரியாயிருக்கும். பத்து மணிக்குமேல ஆகியிருக்கணும். ஆறுலயே நிக்குது. கடிகாரம்கூட ஒழுங்காயில்லை..'' என்று பேசத் துவங்கினாள்.

திகைத்துப் போய் நின்றான். ●



# போட்டுத் தாக்கு!

நடிகர் வடிவேலுவிடம் கேட்கக் கூடாத பத்துக் கேள்விகள் :

1. கோவை சரளா அடி, உதை ஸ்பெஷலிஸ்டா ஆனதுக்கு ஒரே காரணம் நீங்கதானே?

2. ஸ்கிரீன்ல தொண்டை கிழிய கதத, தினமும் எத்தனைமுறை சாதகம் பண்றீங்க?

3. பார்த்திபன் 'L'ன்னா நீங்க ஏன் 'NI'யா நிக்குறீங்க. 'MNOP'ன்னு வரிசையா நிக்க வேண்டியதுதானே?

4. விஜய் ஜஸ்ட் சிவகாசிதான். நான் 'வெடிடிடிடிவேலு'ன்னு சவுண்ட் எஃபெக்ட் குடுக்கிறீங்களாமே?

5. போன்ல யாராவது "ஹலோவ் யார் பேசறது?"ன்னு கேட்டாலே டென்ஷன் ஆயிடறீங்களாமே?

6. 'எக்ஸ்க்யூஸ்மி'ங்கறதை, எப்படி அழகா தமிழ்ல 'எச்சூஸ்மி'ங்கிறீங்க?

7. 'ஊ... ஊ'ன்னு ஊளையிடறதில நரி உங்ககிட்டத் தோத்துப் போயிருமாமே?

8. 'வாழைப்பழ'த்தைச் சரியா உச்சரிக்கச் சொன்னா, எனக்கு அவ்வளவா 'பலக்கமில்லை'ன்னு சொல்றீங்களாமே?

9. யாராவது 'விவேக'மா பேசினா உங்களுக்குப் பிடிக்காதுதானே?

10. உங்க வீட்டுக்கு வந்தவங்களை வழியனுப்பும்போதும் 'ஆஹா கிளம்பிட்டான்யா, கிளம்பிட்டான்யா'ன்னுதான் சொல்வீங்களா?

- பரமு

சொந்தங்கள் வாழ்க!



மனநல ஆலோசகர்
பிருந்தா ஜெயராமன்

சங்கீதா ஒரு சிறிய நகரத்தில் வளர்க்கப்பட்ட, நடுத்தர வர்க்கத்தைச் சேர்ந்த பட்டதாரிப் பெண். அவர் கணவன் சுரேஷ் ஒரு ஸாஃப்ட்வேர் என்ஜினியர். சில வருடங்கள் இந்தியாவில் பெரிய அலுவலகங்களில் வேலை பார்த்த சுரேஷுக்கு, வெளிநாடு செல்ல ஒரு சந்தர்ப்பம் கிடைத்ததும் இருவரும் உற்சாகமாகக் கிளம்பினார்கள். சுரேஷ் மிகவும் 'ட்ரெண்டி'யாக அலங்காரம் செய்து கொள்வார். மனைவியும் தனக்கு நிகராக நவநாகரீகமான ஆடை உடுத்தி, சரளமாக ஆங்கிலம் பேச வேண்டும் என்கிற ஆசை அவருக்கு. இதுபற்றி இந்தியாவில் இருக்கும்

# மாறுபடும் மதிப்பீடுகள்; வேறுபடும் எதிர்பார்ப்புகள்!

4

போதே இருவருக்கும் விவாதம் வருவதுண்டு. வெளிநாடு சென்றவுடன் இதே பிரச்னை இன்னொரு பரிமாணத்தை அடைந்தது. அங்குள்ள பெண்களின் முன், தன் மனைவி எடுபடவே இல்லை என்பது அவன் வருத்தம். அவர்களிடம் சுரேஷ் சகஜமாகப் பேசுவது அவளின் வருத்தம். இரு தரப்பிலும் எரிச்சல் வர, விஷயம் இந்தியாவில் உள்ள பெற்றோருக்கு இறக்குமதியாயிற்று.

சரி, தவறு என்பது அவரவர் கண்ணோட்டங்களைப் பொறுத்தது. இதோ மேலும் சில உதாரணங்கள்.

• 'கல்யாணம் நிச்சயமாகி ஆறு மாசம் இருந்ததே... ஒரு ஃபோன், ஒரு ஈமெயில் உங்ககிட்டேருந்து நான் எவ்வளவு எதிர்பார்த்தேன் தெரியுமா?'

'சாரிம்மா... எங்க குடும்பத்திலே அதெல்லாம் பழக்கமே இல்லாததாலே...'

• 'இதிலென்ன தப்பு? நீ என் பெண்டாட்டி. உன் தோளிலே கைபோட யார் பர்மிஷன் வேணும்?'

• 'எப்பவாவது குடிக்கறது தப்பா? என் அண்ணன் மாதிரி தினமும் குடிக்கறேனா, என்ன?'

• உங்க பணத்திலே ஒரு சின்ன க்ளிப்பாவது வாங்கிக் கொடுத்திருக்கீங்களா?

'இங்கே பாருடா! முழுச் சம்பளத்தையும் கொண்டாந்து கொடுத்துடறேன். க்ளிப் பத்திக் கேக்கறாங்க.'

• 'எதுக்கு உன் கஸின் வண்டியிலே வர்றே? இது நல்லா இல்லே.'

'கோணலா பாத்தா, கோணலாத் தான் தெரியும்!'

• 'பேசாமல் இருங்க, அவளுக்குப் பெரிய பரிசாக் கொடுத்தால் தான் என் அக்கா புருஷன் முன்னாலே உங்க மதிப்புக் குறையாது.'

• 'என் ஃப்ரெண்ட்கிட்டே அவள் மனைவி குறிப்பறிஞ்சு நடந்துக்குவாங்களாம்.'

'ஐயே... அசிங்கம் இதெல்லாம்மா பேசிக்குவாங்க.'

• 'ஆமாம்... குழந்தையத் தெருவை சுத்தம்பண்ணச் சொல்லுங்க. காந்தியின் மறு அவதாரம் நீங்க.'

'நீ பேசாதே. சமுதாய விழிப்புணர்வு இப்பவே குழந்தைக்கு வரணும்.'

நமக்குள் சில நம்பிக்கைகள் நாம் வளரும் சூழ்நிலையைப் பொருத்து ஏற்படுகின்றன. இவை நமது மதிப்பீடுகளிலிருந்து துளிர்க்கின்றன. நமது மதிப்பீடுகள் நான்கு வகைகளாக உருவாகின்றன.

1. உலகளவில் ஏற்றுக்கொள்ளப்படும் விழுமியங்கள். நேர்மை, உண்மை, அன்பு, உழைப்பு போன்ற நல்ல மதிப்புகள் எந்த நாட்டிலும் எந்தக் காலகட்டத்திலும் மாறாதவை.

2. சமுதாய, கலாசார மதிப்புகள் மேலைநாட்டுக் கலாசாரத்தில் மணமாகாத ஆண், பெண் உறவோ, ஓரினச் சேர்க்கையோ

"அவன் பேருக்குப் பின்னால கோடீஸ்வரன்னு பிராக்கெட்டுல போடுறானே... ஏன்?"

"க்ரோர்பதி நிகழ்ச்சியில கலந்துக்குறதுக்கு தயாராயிட்டிருக்கிற தெம்புலதான்."

- பி.ஜி.பி.இசக்கி



சுதந்திரமாக ஏற்றுக் கொள்ளப்படும் விஷயங்கள். நம் நாட்டில் இவை சமுதாய அங்கீகாரம் பெறாதவை. (மேலை கலாசாரம் வேகமாக ஊடுருவி வருகிறது என்பது மறுக்க முடியாத உண்மை)

கலாசார ரீதியாகப் பார்த்தால் வட இந்தியாவுக்கும் தென் இந்தியாவுக்கும் இடையேகூட பல பண்புகள், மதிப்பீடுகள் மாறுபட்டிருக்கின்றன.

3. குடும்ப ரீதியான மதிப்புகள். ஒரே கலாசாரத்தைச் சார்ந்த இரு குடும்பங்களின் மதிப்புகள் கூட மாறுபடலாம். உதாரணமாகத் திருமணத்திற்கு முன் ஃபோன் செய்வது, ஈ மெயில் அனுப்புவது - இவை மேலே குறிப்பிடப்பட்ட ஒரு கணவனது குடும்பத்தில் ஏற்றுக் கொள்ளப்படுவதில்லை.

4. தனிநபரது மதிப்புகள்: ஒரே குடும்பத்தில் வளர்ந்தாலும் அண்ணனும் தம்பியும் வேறுபடலாம். உதாரணமாக, 'பெரியவங்களுக்கு மரியாதை கொடுக்க வேண்டும்' என்று ஒருவரும், 'மரியாதைக்குத் தகுதியாக அவர்கள் நடந்தால் கொடுக்கலாம்' என்று மற்றவரும் இருக்கலாம்.

வெவ்வேறு குடும்ப சூழ்நிலையிலிருந்து ஒன்று சேரும் கணவன், மனைவியிடையே மதிப்புகள் வேறுபடுவது அதிசயமில்லை. 'உண்மை' என்ற மதிப்பை முக்கியமாக இருவரும் கருதினாலும், அவர்களது நம்பிக்கை மாறுபடுவதை ஓர் உதாரணத்தின் மூலம் புரிந்துகொள்ளலாம்.

'எனக்குப் பொய் சொன்னா பிடிக்காதுன்னு உங்களுக்குத் தெரியுமில்லே. இன்னும் எதிலெல்லாம் பொய் சொல்லியிருக்கீங்களோ?' இது மனைவி.

'நான் ஏன் உண்மையைச் சொல்லலேன்னு புரிஞ்சுக்கோ' - இது கணவன்.

தேவையானால் உண்மையைத் தவிர்த்துப் பேசலாம் என்பது கணவனின் நம்பிக்கை. உண்மையை மறைப்பவர்கள் நம்பத்தகாதவர்கள். இது மனைவியின் நம்பிக்கை. நமக்குள் உருவாகும் மதிப்புகளிலிருந்து வரும் நம்பிக்கைகள் நமது செயல்களை எப்படி ஆட்டிப் படைக்கின்றன என்பதற்கு இது ஒரு சிறு உதாரணம்.




''இ... ஈ'ங்கற உங்க படத்தோட டைட்டிலை திடீர்னு 'ஏ... ஏ'ன்னு மாத்திட்டீங்களே, ஏன்?''

''அதை நான் மாத்தலை. படம் ரொம்ப ஆபாசமா இருக்குன்னு சொல்லி, சென்சார் போர்டுகாரங்களே மாத்திட்டாங்க!''

- ஆர்.பேபி ரேகா

மிக நெருக்கமான கணவன் மனைவி உறவில், உணர்வுபூர்வமான எதிர்பார்ப்புகள், படுக்கையறை எதிர்பார்ப்புகள், புகுந்த வீட்டு (ஆணின் புகுந்த வீட்டையும் சேர்த்துத்தான்) எதிர்பார்ப்புகள், பொருளாதார ரீதியான எதிர்பார்ப்புகள், சமுதாய எதிர்பார்ப்புகள் ('அவங்க என்ன நினைப்பாங்க?' போன்ற கேள்விகள்) அப்பப்பா... இத்தனையும் அடங்கும்!

**எ**ல்லாவற்றிற்கும் நம் நாட்டு தம்பதியர் ஈடுகொடுத்து சமாளிப்பதால்தான், நம் சமுதாயம் இன்னும் சிதையவில்லை. இந்தப் பலம் குறையக் கூடாது. குறைய நாம் அனுமதிக்கக் கூடாது.

(சொல்கிறேன்)

தெப்பக்குளத்துக்கு எதிரே இருக்கிற ரோஸரி சர்ச் கான்வெண்ட்ல சேர்த்துவிட்ட பிறகு, ஒழுங்காக ஒரு மாசம் ஸ்கூலுக்குப் போயிருப்பேன். ஸ்கூலுக்குப் போற வழியில, சந்துல பசங்க கோலிக் குண்டு விளையாடுறதும் படம் வச்சு ஆடுறதும் பார்த்தப் பிறகு விளையாட்டுப் புத்தி சும்மா இருக்க விடுமா...?

ஸ்கூலுக்குப் போறேன்னு அந்தச் சந்துல போய் அஞ்சு கோலி விளையாட்டு, சீட்டு மாதிரி படம் வச்சு விளையாடுறது, (இது சூதாட்டச் சீட்டு மாதிரி இல்ல, அப்போ எல்லாம் தீப்பெட்டியின் முன்பக்கம் சிங்கம், புலி, மான், பறவைகள்னு விதவிதமான படங்கள் போட்டு வரும், நாங்க அந்தப் படங்கள கட் பண்ணி சேர்த்து வெச்சு விளையாடுவோம், ஒருத்தன் ஒரு படத்தைத் திருப்பிப் போடுவான், அது என்ன படம்னு சொல்லிப் பந்தயம் கட்டுவோம். சொன்னது சரியாக இருந்தால் அந்தப் படம் எங்களுக்குத்தான்!)

• படம்: ஸ்ரீஹரி

இத ஒரு நாள் கிளாஸ் வாத்தியார் பார்த்துட்டார். என் காதைப்

■■

**முதுகுல பொத்துனு ஒரு குத்து! திரும்பிப் பார்த்தால் முகமெல்லாம் கோபமாய் அப்பா நிற்கிறார்**

■■

பிடிச்சுத் திருகினார். அவர் காதைப் பிடிச்சார்னா அவ்ளோ சாதாரணமா பிடிக்க மாட்டார். வலியிலே அலறுவோம்! அப்படி ஒரு உடும்புப் பிடி பிடிச்சு உலுக்கி எடுத்துடுவார். நான் வலியாலே கத்த, அவர் விடாமல் காதைப் பிடித்துத் திருகினார்.

"அந்தப் பக்கம் போவியா... அந்த விளையாட்டு விளையாடுவியா?"னு கேட்டு இன்னும் பலமா காது திருக, நான் அழுது, போகமாட்டேன், விளையாடமாட்டேன்"னு அலறினேன்.

மறுபடியும் ஒரு அஞ்சு நாள் ஒழுங்கா ஸ்கூலுக்குப் போனேன். ஆறாவது நாள் சந்துல போய் தெரிஞ்சதும், விளையாட்டுல இறங்கிட்டேன். சுவாரஸ்யமா விளையாடிட்டிருக்கேன், அப்போ தோள் மேல ஒரு கை பட்டதும் திரும்பினேன். வாத்தியார் நிக்குறார், கை கால் உதறல் எடுக்க ஆரம்பிச்சுட்டது.

"அய்யா கோலி விளையாடும்போது சிகரெட் பிடிச்சுட்டே விளையாடுவாரோ...?". முறைப்பாய்ப் பார்த்துக் கேட்டார், விரல்களில் இருந்து அது கீழே விழுந்தது.

"இது சிகரெட் இல்லே சார், குச்சி மிட்டாய். பென்சில் மாதிரி கலர் கலராயிருக்கும்" என்றேன் அவசரமாக.

# அப்பா செய்த முடிவு!

விளையாட, வாத்தியார் கண்ணில் பட்டுவிட்டேன், கூப்பிட்டு மிரட்டினார் 'இப்படியே இருந்தே... உன்னை ஃபெயிலாக்கிடுவேன்'னார். காதைத் திருகினார், நான் அலற ஆரம்பித்தேன்.

'அங்க போகமாட்டேன், விளையாட மாட்டேன்'னு அரசியல்வாதி மாதிரி வாக்குறுதி கொடுத்து காது வலியில் இருந்து தப்பினேன்.

அப்புறம் நல்ல பிள்ளையா ஒரு பத்து நாள் ஸ்கூல் போனேன், பன்னிரண்டாவது நாள் சுற்றும் முற்றும் பார்த்து என்னை யாரும் கவனிக்கலேனு

'மிட்டாய்ன்னா சாப்பிடாம எதுக்கு சிகரெட் மாதிரி ஸ்டைலா பிடிச்சிருக்கே... சிகரெட் பிடிக்க இப்பவே ஒத்திகையா...?"னு சத்தமாய்க் கேட்டார்.

"இல்லே சார். சும்மா சார். இனிமே செய்ய மாட்டேன் சார்"னு தந்தி அடித்தேன்.

"ஸ்கூலுக்குப் போ"னு சொல்லிட்டுப் போனார். அப்பா... காதைத்



விஜயகாந்த் பேசுகிறேன்! 4

திருகலே தப்பிச்சேன்னு கிளாஸ¬க்கு நடையைக் கட்டினேன், வாத்தியார் ஒண்ணும் செய்யாமல் அமைதியா போனது பத்தி கிளாஸ் பசங்ககிட்டே சொல்லி ஆனந்தப் பட்டேன்.

வாத்தியாரின் அமைதிக்கான காரணம், வீட்டுக்குப் போன பிறகு தான் தெரிந்தது. 'அதென்ன மிட்டாய் சிகரெட்'னு அப்பா என் முதுகுல டின் கட்டிட்டார்!

குச்சி மிட்டாயை சிகரெட் போல் ஸ்டைலா பிடிச்சதுக்கே இத்தனை அடின்னா, நிஜமாகவே சிகரெட் புகைத்தால் என்ன நடந்திருக்கும்...! அதுவும் ஒரு நாள் நடந்தது.

இப்ராகிமும் நானும் ஒன்பதாவது படித்துக்கொண்டிருந்த நேரம். இளமை வேகத்துக்கே உரிய

• வாழ்த்துக்கள், பாப்பா!"



குறும்புத்தனங்கள் எங்களிடமும் எட்டிப் பார்த்தன. அப்போ வீட்டுக்குத் தெரியாமல் மறைஞ்சு திரிஞ்சு திருட்டு தம் அடித்துக் கொண்டிருந்தோம். எங்க இரண்டு பேரையும் பலருக்கும் நல்லா தெரியும். என்னை 'ரைஸ் மில்காரர் பையன்'னும் அவனை 'வெத்தலை மண்டிக்காரர் மகன்'னும் சொல்வாங்க. ரகசியமா மறைஞ்சு சிகரெட் பிடித்து வந்த நாங்கள், பயம் விட்டுப்போய் ரோட்டோரம் நின்னு கொஞ்சம் தைரியமா புகைவிட ஆரம்பித்த நேரம்...

ஒரு நாள் பஸ் ஸ்டாப்ல ஸ்டைலா சிகரெட் பிடிச்சு கருள் கருளா புகை விட்டுக்கொண்டிருக்கும் போது மதுரை டவுன் பஸ் வந்து நின்றது. பஸ்ஸில் இருந்து யாரோ எட்டிப் பார்த்தார்கள். அதற்குள் பஸ்



• "சாமியேய்..."

## விஜயகாந்த் பற்றி வி.ஐ.பி.!

கேப்டன் என்றால் தலைமை ஏற்பவர் என்று பொருள். விஜய காந்துக்கு அமையப்பெற்றுள்ள தலைமைப் பண்புகளை ஒரு வரம் என்றுதான் நான் சொல்வேன்.

கோடிக்கணக்கில் இருந்த நடிகர் சங்கக் கடனை அடைத்து, இன்று ஒரு 'கார்ப்பஸ் ஃபண்ட்'டை நிறுவி யுள்ள அளவுக்கு வளர்ச்சியென்றால் அந்தப் பெருமை நூறு சதவிகிதம் கேப்டனுக்குத்தான். எப்படி யெல்லாம் திட்டம் போட்டார், எத்தனை முறை வங்கிகளிடம்

பேசினார் என்பதெல்லாம் வெளியில் ரொம்பப் பேருக்குத் தெரியாது.

எந்தப் பிரச்னையை யார் அவரிடம் கொண்டு போனாலும் அவர் அதைப் பொறுமையாகக் கேட்பார். கொஞ்சம்கூட டென்ஷன் ஆகாமல் கேட்டு, தெளிவான முடிவெடுப்பார். ஒரு பிஸியான ஹீரோ, டென்ஷன் நிறைந்த பணிச் சூழலுக்கிடையே இப்படியொரு பொறுமையைக் கொண்டிருப்பது அதிசயம்.

விஜயகாந்துக்கு நிர்வாகத் திறமை இருக்கிறது. பிரச்னைகளைத் தீர்த்து வைக்கும் ஆற்றல் இருக்கிறது. தமிழகத் தென் மாவட்டங்களில் அவருக்கென்று ஒரு பிடிப்பு மக்களிடத்தில் இருக்கிறது. எம்.ஜி.ஆருக்கு அடுத்து விஜய காந்துக்கு ஒரு சிறப்பு நிர்வாகத் திறமை கை வந்திருக்கிறது"

- ஏவி.எம்.சரவணன்



கிளம்பிட்டது. இப்ராகிமை கேட்டேன். 'பஸ்ல யார்டா முறைச்சு பார்த்த மாதிரி தெரிஞ்சதே'னு விசாரிக்க, 'அப்படியா... நான் கவனிக்கலையே'ன்னான்.

வழக்கம்போல வாயில் புகை நாற்றம் வீசாம இருக்க, செய்றதைச் செய்து (வாய் கொப்பளிச்சு, மிட்டாய் சாப்பிட்டு, எலுமிச்சையில் கையை வாயை துடைத்துக்கொண்டு) வீட்டுக்குக் கிளம்பினோம்.

ராத்திரி சாப்பாடு சாப்பிட தரையில உட்கார்ந்திருக்கேன். முதுகுல பொத்துனு ஒரு குத்து! திரும்பிப் பார்த்தால் முகமெல்லாம் கோபமாய் அப்பா நிற்கிறார்.

'மைனருக்கு சிகரெட் கேக்குதா?'னு மறுபடியும் ஒரு அடி விழுந்தது. நான் ஒண்ணும் தெரியாதவனா விழிச்சேன்.

'சிகரெட்டா... நான் தொட்டுப் பார்த்தது கூட கிடையாது'னு ஒரு 'சத்தியம்' செய்தேன்! மறுபடியும் கன்னத்தில் ஓர் அறை விழுந்தது.

'சிகரெட் பிடிச்சதே கிடையாது'னு மறுபடியும் பொய்யை மெய் போல் உருக்கமாய்ச் சொல்ல, உள்ளே இருந்த அக்காவைக் கூப்பிட்டார். அப்போது தான் விஷயம் தெரிந்தது. காலேஜ் முடிச்சுட்டு டவுன் பஸ்ல வந்த விஜயலட்சுமி அக்காதான், நான் புகையைச் சுருள் சுருளாக விட்ட அழகைப் பார்த்தவர்; அப்பாவிடம் புகார் கொடுத்தவர் என்பது.

அக்கா பார்த்ததைப் புட்டுப் புட்டு வைக்க, அப்பாவுக்குக் கோபம் தலைக்கு ஏறியது. மறுபடியும் அர்ச்சனையுடன் பூஜை நடந்தது. அப்பா புரட்டி எடுத்து விட்டார்.

ரோஸரி சர்ச் கான்வெண்டில் இருந்து என்னை எம்.சி. ஸ்கூலில் கொண்டு போய்ச் சேர்த்தார் அப்பா. அதற்குப் பிறகு ஆறாவது வரை நான் நல்லா படிச்சேன். ஸ்கூல்ல முதல் ஆளா வந்தேன். ஏழாம் வகுப்புக்குப் போன பிறகு, மறுபடி"யும் சேட்டை, விளையாட்டு, குறும்புத்தனம் ஆரம்பம். 'இங்கே இருந்தா நீ உருப்பட மாட்டே'னு அப்பா முடிவு செய்தார்.

*(சொல்றேன்)*

படங்கள்: **சஜோ**

# மகுடேசுவரன் கவிதைகள்

# காற்று

மயானத்தில்
எரியூட்டப்பட்ட எனதுடல்
தீக்குன்றி அவிந்துபோகலாம்

அப்போது, காற்றே!
என் மூத்த புத்திரனே!
தகன விறகில் பற்றா நெருப்பை
உன் வாய் வைத்து ஊதிப் பெருக்கு!

யாவும் எரிந்தால் நீறாய்க் குவிந்தால்
நீயும் நானும் ஒன்றா - தனியா?

தென்றல்
முதிர்ந்த இலையை
சற்றே அசைத்து அகற்றுகிறது

உதிரும் இலை
காற்று வெளியில்
பறக்கும் சும்பனமாகிறது

இலையில் ஊர்ந்த எறும்புக்கு
வாய்க்கிறது
அதன் வாழ்வின் மகத்தான பயணம்
பரவசமான அபூர்வ கணம்!

அதிகாலையில் என் முற்றத்தில்
நிரம்பியிருந்தாய்

கன்னிகளின் படைப்புமனம்
கோலங்களாகச் சுருண்டிருந்த வீதியில்
மெல்ல நடந்தாய்

விவாதத்தின் சூடுபோல
படிப்படியாய் வெப்பம் அதிகரித்த பகலில்
நெல்லி மரத்தின் சுள்ளெறும்பாய்
நிலமெங்கும் அலைந்தாய்

மாலையில்
கொஞ்சத் தூண்டும் குழந்தையாகி
ஒவ்வொருவர் மடியாய் களியாடினாய்

இரவு கவிந்தது
அருகில் வருகிறாய்
என் துயரங்களை ஆற்றும் தோழியாக...!

எங்கோ தொலைவில்
இருக்கிறாய் நீ

எங்கோ தொலைவில்
இருக்கிறேன் நான்

வேருக்கும் பூவுக்கும்
இடையோடும் கொடிபோல
நமக்கிடையே
தீக்கமற நிறைந்திருக்கிறது
காற்று!

என் ஆத்ம குறிஞ்சியில்
பனிக்காற்று

என் அறிவு முல்லையில்
வனக்காற்று

என் மனத்து மருதத்தில்
வயற்காற்று

என் உணர்ச்சி நெய்தலில்
கடற்காற்று

என் இதயப் பாலையில்
மணற்காற்று

ஓவியம்: அனந்தபத்மநாபன்

அந்தப் பெண், பேருந்தின் முதல் வரிசையில் அமர்ந்திருந்தாள். இது அவள் செய்த முதல் தவறு. சிறிது நேரத்துக்கெல்லாம் வண்டி ஓட்டுநர், அந்தப் பெண்ணை நெருங்கி உடனடியாகத் தனது இருக்கையை விட்டு அந்தப் பெண் வெளியேற வேண்டும் என்று கண்டிப்புடன் கூறினார். ஒரு வெள்ளையர் அமர வேண்டிய இடத்தில், ஒரு கறுப்பினப் பெண் அமர்ந்திருப்பதை அந்த ஓட்டுநரால் சகித்துக்கொள்ள முடியவில்லை. பேருந்தில் இருக்கைகள் காலியாக இருந்தாலும் கறுப்பின மக்கள் அமரக் கூடாது. அப்படியே அமர்ந்தாலும் ஏதாவதொரு வெள்ளைத் தோலைக் கண்டால் உடனே எழுந்து நிற்க வேண்டும். சுயிங்கம் மெல்லும் ஒரு வெள்ளைப் பொடியன் ஏறினால் கூட, ஒரு வயதான கறுப்பினப் பெண் மரியாதையுடன் தன் இருக்கையை பொடியனுக்கு விட்டுக்கொடுக்க வேண்டும். இல்லையென்றால் 'சுயிங்கம்' கேஸ் போட்டுவிடும்.

ஆனால்... இந்த கறுப்பினப் பெண் மட்டும் தன் இருக்கையை விட்டு இறுதிவரை எழுந்திருக்கவேயில்லை. இது அவள் செய்த இரண்டாவது தவறு. இந்த இரண்டு குற்றங்களுக்காகவும் அவள் கைது செய்யப்பட்டாள். இது நடந்தது மாண்ட்கோமெரியில், டிசம்பர் 1, 1955-ல். அவள் பெயர் ரோசா பார்க்ஸ்.

# கறுப்பு எறும்பு, வெள்ளை எறும்பு!

அதிர்ச்சியடைந்தது மாண்ட்கோமெரி. அங்குள்ள தேவாலயம் ஒரு அறிக்கையை வெளியிட்டது.

'ரோசாவுக்கு நாம் அனைவரும் ஆதரவு தர வேண்டும். நாளை முதல் யாரும் பேருந்தில் ஏற வேண்டாம். வேலைக்குச் செல்பவர்கள், கடைக்குச் செல்பவர்கள், பள்ளிக்குச் செல்லும் குழந்தைகள் அனைவரும் வெள்ளையர்களின் பேருந்துகளைப் புறக்கணிக்க வேண்டும்.'

இந்தப் போராட்டத்தை நடத்தி வைக்கும் பொறுப்பு மார்டின் லூதர் கிங்கிடம் ஒப்படைக்கப்பட்டது. (அப்பொழுது அவர் ஒரு பிரபலம் கிடையாது). மார்டின் யோசித்தார். 'நிஜத்தில் இது சாத்தியமாகுமா? கறுப்பர்கள் ஒத்துழைப்பார்களா?' அன்று இரவு முழுவதும் அவர் தூங்கவில்லை. புரண்டு புரண்டு படுத்தார். தொலைபேசி அடித்துக் கொண்டேயிருந்தது. இரண்டு வாரக் குழந்தை யொலண்டாவின் அழுகை வேறு. குறைந்தது அறுபது சதவிகித கறுப்பர்கள் பேருந்துகளைத் தவிர்த்து விட்டால் கூட போராட்டம் வெற்றியடைந்துவிடும். ஆனால் செய்வார்களா? 'அடப்போய்யா, உன்னால என் பொழப்பு கெட்டுப் போகுது' என்று பேருந்தில் ஏறிவிட்டால்...?

மறுநாள், காலை 5.30 மணிக்கே மார்டின் தயாராக இருந்தார். அவர் வீட்டிலிருந்து பேருந்து நிறுத்தம் ஐந்து நிமிட நடை தான். என்ன செய்யலாம்? படபடக்கும் இதயத்துடன் யோசித்துக்கொண்டிருந்த மார்டினை நோக்கி அவர் மனைவி கொரிட்டா கத்தினாள். 'மார்டின், மார்டின் இங்கே வா, சீக்கிரமா வா'. குடித்துக் கொண்டிருந்த காபி கோப்பையை அப்படியே கீழே போட்டு விட்டு ஓடினார் மார்டின். கொரிட்டா புன்னகைத்தபடியே ஜன்னலைக் காட்டினாள். மார்டின்

உலகம் இவ்வளவுதான்!



திரைச்சீலையை விலக்கி விட்டுக் குனிந்தார். என்ன ஆச்சரியம். அவர் வாசலைக் கடந்து ஒரு பேருந்து நத்தையைப் போல் ஊர்ந்து கொண்டிருந்தது. மார்டினால் நம்ப முடிய வில்லை. அந்தப் பேருந்து முழுக்க முழுக்க காலி! உள்ளே ஒரு கறுப்பர் கூட இல்லை. இருந்த ஒன்றிரண்டு ஆட்களும் 'சுயிங்கம்' ஆசாமிகள்தான்.

ஒரு வேளை அதிகாலை நேரம் என்ப தால் யாரும் வரவில்லையோ? மீண்டும் காத்திருந்தார். பதினைந்து நிமிடங்கள் கழித்து மற்றொரு பேருந்து வந்தது. அதிலும் யாருமில்லை. அடுத்த ஒரு மணி நேரத்துக்கு மார்டின் தனது காரை ஓட்டிக்கொண்டு அனைத்துப் பகுதிகளையும் வெறியோடு சுற்றினார். ஒரு கறுப்பரைக் கூட பேருந் துக்குள் காண முடியவில்லை.

ஆச்சரியம். ஒருபக்கம், அலபாமா கல்லூரி மாணவர்கள் நடந்துகொண்டிருந் தனர். மற்றொரு பக்கம் பெண்கள் எதையோ சொல்லிச் சிரித்தபடி, மாணவர் களைப் பின்தொடர்ந்துகொண்டிருந்தனர். இன்னமும் சிலர் நடுராத்திரியே எழுந்து நடக்க ஆரம்பித்து விட்டனர். மார்ட்டின் கண்களை விரித்து மீண்டும் மீண்டும் பார்த்து ரசித்தார். சாலையின் இரு பக்கங் களிலும் எறும்புகள் போல் கறுப்பின மக்கள் வரிசை வரிசையாக நடந்துகொண்டிருந் தனர். (ஒரு வயதான பெண்மணி, சிரமத் துடன் நடந்து செல்வதைப் பார்த்து ஒரு நீக்ரோ தனது காரை நிறுத்தினார். அந்தப் பெண் சிரித்தபடியே அவனைத் திருப்பி அனுப்புகிறாள். 'நான் எனக்காக நடக்க வில்லை. என் குழந்தைகளுக்காக, என் பேரக் குழந்தைகளுக்காக நடக்கிறேன். என்னை நடக்க விடுங்கள்.)

ஒரு பெண்ணுக்காக, ஒட்டுமொத்த மாண்ட்கோமெரி கறுப்பர்களும் விறுவிறு வென்று சாலையில் நடந்த சம்பவம் அமெரிக்காவை மட்டுமல்ல உலக வரை படத்தையே புரட்டிப் போட்டது. எவ்வளவு காலம் இப்படிக் கறுப்பர்கள் எறும்பு போல் நடந்தார்கள் தெரியுமா? ஒரு வருடம்!

இரண்டு வாரங்களுக்கு முன்பு தனது 92வது வயதில் ரோசா பார்க்ஸ் மரண மடைந்தார். அவரது உடலைக் காண மீண்டும் ஆயிரக்கணக்கான நீக்ரோக்கள் சென்ற வாரம் அமெரிக்கத் தெருக்களில் நடக்கத் தொடங்கினர். மீண்டும் வரிசை வரிசையாக எறும்புக் கூட்டங்கள். ஒரே வித்தியாசம். இந்த முறை கறுப்பு எறும்புக ளோடு சேர்ந்து பல வெள்ளை எறும்புகளும் நடந்து வந்தது தான்.

- **மருதன்**

அனுஷா திகைத்துப் போனாள். ஸ்ரீலதாவின் குரல் மிக உக்கிரமமாகத் தொனித்தது. அவள் கூறிய வாக்கியத்தைவிட அது கூறப்பட்ட விதம், கார்த்திக்கைப் பற்றிய அவள் கருத்தை அதிகமாக விளக்கியது. "கார்த்திக் ஒரு மனித ஜென்மமே இல்லை!" அந்த ஒரே வாக்கியத்தோடு நிறுத்திக்கொண்டுவிட்டாள்.

அன்று அவளை வீட்டுக்கு வரவழைத்ததிலிருந்து ஸ்ரீலதா பேசிய ஒரே ஒரு முழு வாக்கியமே அதுதான். மற்றபடி ஒற்றை வார்த்தைகளைத்தான் அவளிடமிருந்து பதிலாகப் பெற முடிந்தது.

இத்தனைக்கும் நடுவே, ஆனந்த் சடாரென்று பழைய நிலைமைக்குத் திரும்பியது இலேசான ஆசுவாசத்தைத் தந்திருந்தது.

அலுவலகம் முடிந்து வீட்டுக்கு வந்த அடுத்த ஐந்தாவது



# விலங்குகள்

நிமிடமே, ஆனந்த் கீழே வந்துவிட்டான். வந்த அடுத்த கணமே ஸ்ரீலதாவைக் கிண்டல் செய்யத் துவங்கிவிட்டான். "அடடா, சின்ன ராணி வந்துட்டீங்களா? இளவரசரை இன்னும் எத்தனை மாசத்திலே எதிர்பார்க்கலாம்?"

ஸ்ரீலதா மௌனமாகவே இருந்தது அவனுக்குப் புதிராக இருந்தது. தன்னைப் போலவே அவளும் பேச்சைத் துண்டிக்கப் பிடிக்காதவள் என்பது அவனுக்குத் தெரியும்.

ஆனந்த் அவளை எப்படியும் கலகலப்

அந்தப் பெரிய நதியில் பயணித்துக் கொண்டே வந்த முதலையின் காதுகளில், கரையில் இருந்த ஒரு பாட்டி தன் பேரனுக்குக் கூறியது விழுந்தது.

"முதலை இருக்கே, அதுக்கு வஞ்சகம் அதிகம். பேராசை பிடிச்ச விலங்கு அது. குரங்குக் குட்டியைத் தின்பதற்காக பொய் சொன்ன மிருகம்தானே அது. முதலை பொய் சொல்லக் கேட்பானேன்! பொய்யாகக் கண்ணீர் விடுவதுகூட முதலைக்குக் கைவந்த கலைதானே!"

முதலைக்கு வெறி வந்தது. நதியில் மட்டும் அந்தப் பாட்டி காலை வைத்தால் உடனடியாக அவளைத் தன் பற்களால் கடித்துக் கொல்ல வேண்டியதுதான்.

அதற்குள் பேரன் ஒரு கேள்வியைக் கேட்டான். "பாட்டி, மனிதனுக்கும் முதலைக்கும் என்ன வித்தியாசம்?"

12

"இளவரசி மேஜராக வேணாமா?"

ஸ்ரீலதா இலேசாகப் புன்னகைத்தாள்.

அந்தவரை தங்கை புன்னகை செய்ததே அனுஷாவுக்கு ஆறுதலாக இருந்தது.

'ஏதற்காக உன் கணவரை மனிதப் பிறவியே இல்லை என்று முடிவெடுத்தாய்?' என்று அனுஷா வாய்விட்டுக் கேட்கவில்லை. தங்கை முகத்தையே உற்றுப் பார்த்தாள்.

''கல்யாணம் ஆன கொஞ்ச நாளிலேயே சமையல்காரம்மாவை வேலையில் இருந்து நிறுத்தினார். அவங்க எனக்கு நல்ல பேச்சுத் துணையாவும் இருந்தாங்க. அவங்களை இவர் திடீர்னு நிறுத்தினது எனக்கு எவ்வளவு கஷ்டமாக இருந்தது தெரியுமா? அதுமட்டுமில்லே, என்னிடம் இதைப்பற்றி கலந்து பேசாமலேயே அவர் இந்த முடிவை எடுத்ததிலே நான் அடிபட்டுப் போயிட்டேன்''

## அருண் சரண்யா

அனுஷாவுக்கு என்ன சொல்லி அவளைச் சமாதானப்படுத்துவது என்று தெரியவில்லை. ஆனால் ஏதாவது பேசி ஆக வேண்டும். அப்போதுதான் பேச்சு சங்கிலியாக நீளமுடியும்.

''கார்த்திக் செய்தது தப்புன்னே வெச்சிப்போம் ஸ்ரீ. ஆனால் அதுக்கப்புறம் நீ உன்னைச் சமாதானப்படுத்திக்கிட்ட

பாக்கும் முயற்சியைத் தொடர்ந்தான். "அக்காவும் அண்ணாவும் எனக்குக் கல்யாணம் பண்ணி வைக்கணும்னு துடிச்சிக்கிட்டிருக்காங்க. உனக்குப் பிறக்கப் போறது இளவரசின்னா சொல்லு, நான் இன்னும் ஒரு பத்தொன்பது வருஷம் காத்திருக்கத் தயார்."

''அதென்ன பத்தொன்பது வருஷக் கணக்கு?'' அனுஷாதான் கேட்டாள்.

**''அதுவா? மனிதனின் மேல்தாடை அசையாது. கீழ்தாடைதான் அசையும். ஆனால் முதலையின் மேல்தாடைதான் அசையும்''**

**அதற்குமேல் அவள் எதுவும் பேசாமலிருக்க, திருப்தியுடன் முதலை தன் பயணத்தைத் தொடர்ந்தது.**



மாதிரிதானே இருந்தது. உன் கணவரோடு அன்னியோன்னியமாகத்தானே இருந்தே?"

"அவர் நெருக்கம் என்னோட மட்டும் இல்லைக்கா."

ஸ்ரீலதா அத்தோடு நிறுத்திக்கொண்டாலும் அனுஷாவால் புரிந்துகொள்ள முடிந்தது. மல்லிகா!

ஆனால் இதுபோன்ற விவரங்களில் நூறு சதவிகிதம் தெளிவாக இருப்பது நல்லது. "நீ என்ன சொல்றே ஸ்ரீ?" கேட்டாள்.

"முதல்லே சமையல்கார அம்மாவை வேலையிலிருந்து நிறுத்தினார். அப்புறமா வேலைக்காரப் பெண்மணியையும் நிறுத்திட்டார். திட்டமிட்டு என்னைத் தனிமைப்படுத்தினார்"

"நீ நினைப்பது சரியில்லே ஸ்ரீ. ஏட்டிக்குப் போட்டியா அவர் செய்தார்னு வேணா வெச்சிக்கலாம். அவருடைய செக்ரடரி மல்லிகாவை வேலையிலிருந்து நீ நிறுத்தினே. அந்தக் கோபத்திலே கார்த்திக் வீட்டு வேலைக்காரியை வேலையிலிருந்து நீக்கிட்டார்"

"ஐயோ அக்கா, அதுவேறே. இது வேறே. தவிர மல்லிகாவை நான் நிறுத்தலே"

"ஆனா அவ நிற்கும்படியான ஒரு சூழலை நீதான் உருவாக்கினே"

"உன் கணவரை வேறு ஒருத்தி பங்கு போட்டுக்கிட்டா நீ சும்மா இருப்பியா?" ரௌத்ரமாகக் கேட்டாள் ஸ்ரீலதா.

இன்னும், தானும் ராஜனுமே நெருங்கவில்லை என்ற உண்மை உரைக்க ஒரு வெறுமை படர்ந்தது அனுஷாவின் மனத்தில். அதைத் தொடர்ந்து சில நாட்களுக்கு முன் மல்லிகாவுடன் நடந்த சந்திப்பு அவள் மனதில் விரிந்தது.

மல்லிகா அளித்த காபி டம்ளரை வாங்கி அப்படியே பக்கத்தில் வைத்தாள் அனுஷா.

"அதாவது உங்க சந்தேகங்களுக்கு நான் விளக்கம் கொடுத்தப்புறம்தான் காபி குடிப்பீங்க இல்லையா?" என்று மல்லிகா கேட்டாள்.

"என் தங்கையின் வாழ்க்கைதான் எனக்கு ரொம்ப முக்கியம்"

"இருக்கட்டும். எனக்குத்தான் இப்படி ஒரு அக்கா இல்லாமல் போய்விட்டாள். ஒற்றைப் பெண்ணாகவே வளர்வதில் உள்ள கஷ்டங்கள் எனக்குத் தான் தெரியும்" என்றபோது மல்லிகாவின் குரலில் வருத்தம் எட்டிப் பார்த்தது.

"ஓ.கே., உங்க தங்கையின் வாழ்க்கையிலே நான் குறுக்கிட்டதா நினைக்கிறீங்களா? எதனாலே? டாக்டருக்கும் எனக்கும் இடையே தப்பான உறவு இருக்குன்னு நம்பறீங்க?"

"அப்படின்னு இல்லே" என்றாள் அனுஷா.

"க்ளினிக்குக்கு வரும் நோயாளிகளில் பலரும் என்னைப் பாராட்டி டாக்டரிடம் சொல்வாங்க. அதனால் அவருக்கு என் மேலே ஒரு மதிப்பு"

அது உண்மை என்றே தோன்றியது அனுஷாவுக்கு.

"அதனாலேதான் நான் வேலையை விட்டு விலகின பிறகும் டாக்டர் என்னை மறுபடியும் தன்னிடம் வேலைக்குச் சேரும்படி வற்புறுத்துகிறார். ஒன்னை நீங்க புரிஞ்சிக்கணும். என்னை வேலையை

---

"டாக்டர் பத்து நாளா ஒரே கனவா வருது. கனவுதானேன்னு விட்டுட்டேன். இப்போது வேற ஒண்ணு இடையில் வருது"

"என்ன வருது?"

"இந்தக் கனவை உங்களுக்கு வழங்குபவர்கள்னு இடைஇடையே விளம்பரமும் வருது டாக்டர்!"

– ஆர்.தங்கராஜ்



விட்டு நிற்கச் சொல்லி டாக்டரும் சொல்லலே. உங்க தங்கையும் சொல்லலே. என்னாலே அவங்க ரெண்டுபேருக்கும் பிரச்னைகள் வேண்டாம்னு தான் நானாக இந்த முடிவெடுத்தேன்."

மல்லிகாவின் பார்வை டம்ளரில் படிய, அனுஷா இப்போது காபியை எடுத்துக் குடிக்கத் தொடங்கினாள்.

"இவ்வளவு தூரம் தெளிவாகப் பேசும் நீங்கள் என் தங்கைக்கும் அவள் கணவருக்கும் நடுவே, உங்கள் காரணமாகப் பிரச்னை எழாமலே பார்த்துக் கொண்டிருக்கலாமே"

"சிக்கலை உருவாக்கிக்கிட்டது உங்க தங்கை. இதுக்கு எந்தவிதத்திலும் நீங்க என்னைக் காரணமாகக் காட்ட முடியாது"

அனுஷாவுக்குச் சட்டென கோபம் வந்தது. "க்ளினிக் கீழே இருக்கும்போது தேவை இல்லாமல் நீங்க அடிக்கடி மேலே வருவதும், கார்த்திக்கை கீழே அழைத்துப் போனதும் தகுந்த காரணங்கள் இல்லையா?"

மல்லிகாவிடம் இதற்கும் ஓர் பதில் இருந்தது.

"என்னவாம்?" சந்தேகம், ஆர்வம் இரண்டுமே வெளிப்பட்டன ஸ்ரீலதாவின் கேள்வியில்.

"அவள் உன்னுடன் ஒரு நட்பை ஏற்படுத்திக்கொள்ள விரும்பினாள் ஸ்ரீ. அதற்கு ஏதாவது ஒரு சாக்கு வேண்டும் என்றுதான் அடிக்கடி மேலே வரத் தொடங்கினாள். உன்னைப் பார்த்தபோது ஒரு சகோதரியைப் பார்த்ததுபோல் இருந்ததாம் அவளுக்கு"

ஸ்ரீலதாவின் முகத்தில் இளக்கமும், அனுஷா கூறுவதை முழுமையாக ஏற்றுக் கொள்ள முடியாத தவிப்பும் மாறிமாறிப் புலப்பட்டன.

'இப்போது யோசித்தால் சிலமுறை குறிப்பிட்ட காரணம் இல்லாமலே மல்லிகா தன்னைத் தொலைபேசியில் தொடர்புகொண்டது தோன்றியது. தன்னைப் பார்த்து அவள் சிரித்ததும் பேசியதும் பாசத்துடன்தானோ? நானாக



"கதை டிஸ்கஷனில் உட்கார்ந்திருக்காங்களே. புது கதையைக் கண்டுபிடிக்கவா?"

"புது மாதிரியான ஒரு வியாதியைக் கண்டுபிடிக்க...."

- எஸ்.மோகன்

என் கற்பனையை ஓடவிட்டு இயல்பானவற்றையெல்லாம் தவறானதாகப் புரிந்து கொண்டுவிட்டேனோ?'

அனுஷாவுக்குக் கொஞ்சம் நம்பிக்கை ஏற்பட்டது. தங்கை நம்பிக்கை ஊட்டும் விதத்தில் யோசிக்கத் தொடங்கியிருக்கிறாள்.

"கொஞ்சம் யோசிச்சுப்பாரு ஸ்ரீ. உன்மேல் இருக்கும் பிரியத்தாலேதானே உன்னை இந்த வீட்டுக்கு அனுப்பக் கூட கார்த்திக் தயங்கினார்? அப்படி அந்த மல்லிகாவோடு நெருக்கமாக இருக்க ஆசைப்பட்டால், அவரு உன்னை அப்பப்போ வெளியில் அனுப்ப உடனடியாகச் சம்மதித்திருப்பாரே."

ஆனால் புதிய பூதம் ஒன்று புறப்பட்டது.

"ஐயோ, யாருக்கு வேணும் இந்த நெருக்கம்? வீட்டிலே நானும் அவரும் மட்டும் என்பதால் எப்போதும் ஒரே நினைப்புதான் அவருக்கு" சட்டென இப்படிக் கூறியபோது ஸ்ரீலதாவின் உடல் நடுங்கியது.

தங்கையின் மனநிலை பாதிக்கப்பட்டதற்கான முக்கிய காரணத்தை நெருங்கிக் கொண்டிருக்கிறோம் என்றது அனுஷாவின் உள்ளுணர்வு.

(தொடரும்)



"என் பெயர் ஜு"

-ரோபோ கதை



கண்ணனோடு கலந்தவர்!

-புராணக் கதை



ஸ்விஸ் மிக அழகான நாடு!

-போவோமா புது உலகம்!



கிறிஸ்துமஸ் கலாட்டா!



ஹையா! சச்சின் வந்தாச்சு!

-கவர் ஸ்டோரி

# கோகுலம்

குழந்தைகளின் குதூகலம்!

டிசம்பர் 2005 ரூ.6/- மட்டுமே!



# டென்ஷன்டா சாமி!

சீதாராம்

சட்டை முழுவதும் தொப்பலாய் நனைந்திருந்தது. முகம் முழுவதும் கவலை ரேகைகள். அந்த ஐந்து நட்சத்திர ஓட்டலின் குளிர்சாதன வசதியால், முரளி முகத்தில் பெருகியிருந்த வியர்வையைக் குறைக்க இயலவில்லை.

அவன் கண் முன்னால், வீட்டை விட்டுப் புறப்படும் முன் ஆஸ்துமா இழுப்பால், லொக்கு லொக்கு என்று இருமிக்கொண்டிருந்த தாயார், பத்தாயிரம் ரூபாய் பணத்தை எடுக்க பேங்குக்குத் தனியாக விரைந்த மனைவி, வீட்டுப் பாடங்கள் பற்றிச் சந்தேகம் கேட்க நண்பன் வீட்டுக்கு சைக்கிளில் சென்ற மகன் என்று காட்சிகள் விரிந்துகொண்டிருக்க டென்ஷன் தலைக்கேறி அவஸ்தைப்பட்டான்.

கம்பெனியின் போர்டு மீட்டிங்கை அந்த ஓட்டலில் நடத்த ஏற்பாடு செய்திருந்தார்கள். டைரக்டர்களின் வருகைக்காகக் காத்திருந்த எம்.டி. ராமின் முன் நின்றுகொண்டிருந்தான் முரளி. எல்லா வேலைகளையும் வழக்கம்போல் திறம்பட முடித்திருந்தாலும், இன்று பொறுமையும் அமைதியும் இன்றித் தவிப்பதை அவர் கவனித்துவிட்டார். "உடம்பு சரியில்லையா முரளி?" என்று அக்கறையுடன் வினவினார்.

'என் கவலை இவருக்குத் தெரிந்து என்ன ஆகப் போகிறது?' என்று நினைத்த முரளி செயற்கைப் புன்னகையுடன், "ஒன்றுமில்லை" என்று சுருக்கமாக முடித்துக் கொண்டான்.

முரளியைத் தேற்ற நினைத்த ராம், "இன்று முக்கியமாக ஊழியர்கள், அவர்கள் வளர்ச்சி, போனஸ் என்றுதான் பேசப் போகிறோம். உங்களைப் போன்ற திறமைசாலிகளுக்கு நல்ல எதிர்காலம் இருக்கிறது. கவலைப்படாதீர்கள்" என்றார்.

அப்போதும் முரளியின் முகத்தில் இறுக்கம் தளராமல் போகவே, "உங்க உதவியாளர் இருக்கிறார். நீங்க வீட்டுக்குப் போய் ரெஸ்ட் எடுங்க முரளி" என்று மேலும் தொடர்ந்த ராமை நன்றியுடன் நோக்கியவன் சம்பிரதாயத்திற்குக் கூட மறுக்காமல் அவரது காரிலேயே கிளம்பினான்.

சீட்டின் நுனியில் அமர்ந்து, நெளிந்து கொண்டிருந்த முரளியைப் பார்த்த டிரைவர் என்ன உபாதையோ என்று பரிதாபப்பட்டு "வழியில் நிறுத்தட்டுமா?" என்று கேட்டான்.

"வேண்டாம். நீ வேகமா போ" என்று சொல்லிவிட்டு கண்களை மூடி சாய்ந்துகொண்டான்.

பொறுமையில்லாமல் தடதடவென்று கதவைத் தட்டி மனைவி உமா வந்து முழுவதும் திறக்கும் முன்னரே பாய்ந்து, அவளைத் திடுக்கிட வைத்துவிட்டு படுக்கை அறைக்கு ஓடினான்.

பத்திரமாக சார்ஜரில் வீற்றிருந்த செல்பேசியை எடுத்துக் கையில் வைத்துக் கொண்டதும்தான் அவனுக்கு உயிரே வந்தது. 'இப்போதெல்லாம் இது கையில் இல்லையென்றால் நான் படும் மனக்கஷ்டம் எனக்கல்லவா தெரியும்' என்று முணுமுணுத்துக்கொண்டான்.









# அநியாயமாக பலியான ஆறு உயிர்கள்!

மழையில் சொட்டச் சொட்ட நனைந்து, குளிரில் வெடவெடத்தபடி, ரெயின்கோட் சகிதம் உள்ளே நுழைந்து கொண்டிருந்தார் ஒற்றன். ஈரத்தலையைத் துவட்டக்கூட விடாமல் மேட்டரைக் கேட்டு அவசரப்படுத்தினோம்.

அவரோ நம்மைக் கண்டு கொள்ளாதது போல, "அடேயப்பா... என்ன மழை... என்ன மறியல்... என்ன கூட்டம்" என்று டூ மச்சாக அங்கலாய்த்தார். அப்போதே நமக்குத் தெரிந்து விட்டது. மனிதர் வியாசர்பாடிக்குச் சென்று வந்திருக்கிறார் என்று. சரி... நாமே மேட்டரைப் போட்டு வாங்கலாம் என்று மெதுவாகப் பேச்சுக் கொடுத்தோம்.

"என்னதான் நடக்குது வியாசர்பாடியில?..." என்றோம்.

தேங்காய்ப் பூ டவலால் தலையைத் துவட்டியபடி பேசிய ஒற்றன்,

"சமீபத்துல சென்னைல மழை சும்மா பின்னி எடுத்ததுல்ல... அதுல ஏகப்பட்ட பேருக்கு, குறிப்பாக வடசென்னைல பெரிய அளவுல சேதாரம் ஆகிப்போச்சு... அவங்களுக்காக உடனடி நிவாரணமா குடும்பத்துக்கு ரெண்டாயிரம் பணம், பத்து கிலோ அரிசி, வேட்டி - சேலை, ஒரு லிட்டர் மண்ணெண்ணெய் தர்றேன்னு அம்மா சொன்னாங்க... இது நடந்தது போன மாசம் 30-ம் தேதி. இது போதாதா நம்ம ஆளுங்களுக்கு..." என்று நிறுத்தியவர், மீண்டும் பேச ஆரம்பித்தார்.

"இதுக்காக டோக்கன், வாங்கறதுல ஏகப்பட்ட பிரச்னையாகி பொதுமக்கள் சாலை மறியல்... அது... இதுன்னு ரகளை பண்ண ஆரம்பிச்சுட்டாங்க. இந்தக் கூத்து நடந்துக்கிட்டு இருக்கும் போதே, போன ஞாயிற்றுக் கிழமை விடியற்காலைல யாரோ சில விஷமம் புடிச்ச ஆசாமிங்க, 'ஓடியாங்க... ஓடியாங்க.... காலேஜாண்ட டோக்கன் தர்றாங்க'ன்னு பிட்டைப் போட்டுட்டு ஓடிப் போயிருக்காங்க. நம்ம மக்களும் அதை நம்பி அடிச்சுப் பிடிச்சு வியாசர்பாடி அம்பேத்கர் காலேஜ் முன்னால கூடியிருக்காங்க... கிட்டத்தட்ட மூவாயிரம் பேரு இருக்கும். கவுண்டர் திறக்காததால கூட்டம் முண்டியடிச்சு,









ஒற்றன்

உள்ளே போக முயல, தள்ளுமுள்ளு ஆகி சுப்பம்மா, குஞ்சம்மாள் உள்ளிட்ட ஆறு பெண்கள் ஸ்பாட்லயே இறந்து போயிட்டாங்க. ஏகப்பட்ட பேருக்கு காயம் வேற" என்று முடிப்பதற்குள், "புரளி பரப்பியது யாருன்னு கண்டுபிடிச்சாச்சா?" என்றோம்.

"மவனே... அவனுங்க மட்டும் கையில கிடைச்சாங்க..." என்று பல்லைக் கடித்தவர், 'அ.தி.மு.க. அரசு தரும் நிவாரணம் முழுமையாகப் போய்ச் சேர்ந்தால், அது நமக்கு நல்லதல்ல என்று எதிர்கட்சியினர் தான் இதைச் செய்துள்ளனர்' என்கிறார் நம்மிடம் பேசிய ஆளுங்கட்சிக் கவுன்சிலர் ஒருவர். ஆனால் 'நிவாரணத்தை எப்படி முறைப்படித் தருவது என்று கூடத் தெரியாமல் செய்துவிட்டு அடுத்தவர் மீது பழி போடக் கூடாது' என்கிறார் தி.மு.ககாரர் ஒருவர். "இப்படி தில்லுமுல்லு பேச்சு பேசறதால தானே இவங்களுக்கு அரசியல்வாதின்னே பேரு கொடுத்திருக்காங்க" என்று பொருமினார்.

"சரி... கூட்டத்துல இறந்து போனவங்களுக்கு வேற நிவாரணம் தரணுமே" என்று நாம் கேட்க, "ஆமா... பின்னே தர வேணாமா... இறந்து போன குடும்பத்துக்கு ஒரு லட்சமும், காயமடைஞ்சவங்களுக்கு பதினைஞ்சாயிரமும் தர்றேன்னு அம்மா டிக்ளேர் பண்ணிட்டாங்க..."

"அதைச் செய்த வரைக்கும் சரிதான்... இன்னும் ஏகப்பட்ட பேருக்கு முழுமையா நிவாரணம் கிடைக்கலன்னு சொல்றாங்களே... அதுக்கு என்ன பண்ணப் போகுதாம் கவர்மெண்ட்?"

"அட... சும்மா விட்ருவாங்களா அம்மா. நிவாரணப் பொருள்கள் வழங்குற மையங்களோட எண்ணிக்கையை உடனடியா 23 அதிகப்படுத்தியிருக்காங்க. அதேபோல ரேஷன் கடைகளோட எண்ணிக்கையையும் 165-ல இருந்து 199-ஆக உயர்த்தியிருக்காங்க. நிவாரணம் வாங்கிக் கொள்ள, வர்ற பத்தொன்பதாம் தேதி வரை நீட்டிப்பு செய்திருக்காங்க... ஸோ... பாதிக்கப்பட்ட மக்கள் நல்லபடியா போய் நிவாரணத்தை வாங்கிக்குவாங்கன்னு மேட்டர்ல எழுதிடுங்க"ன்னுட்டு திரும்ப ரெயின்கோட்டை அணிந்தபடி கிளம்பினார் ஒற்றன்.



# எங்கே என் கண்ணன்?

*தன்னை நம்புவது*
*தன்னம்பிக்கை!*
*என்னை நம்புவதோ*
*நன்னம்பிக்கை!*

**- ஸ்ரீ கிருஷ்ணன்**

**சா**ருவிடம் ஒரு மாற்றம். அது அவள் ராஜத்திடம் சொன்ன விதத்தில் நன்றாகவே எதிரொலித்தது. தூர இருந்து பேசினாலும் குரலின் தொனி ஏராளமான அர்த்தங்களை உணர்த்திவிடும். ராஜமும் புரிந்து கொண்டு வேகமாக பதிலளித்தாள்.

"சாரு... நீ ரொம்ப நொந்து போயிருக்கேன்னு நன்னா தெரியறது. கல்யாணமாகி வந்தபோது இருந்த சாருவா, சமீபத்துல உன்னை நாங்க பார்த்தபோது நீ இல்லை. பட்டணம் உன்னை மாத்திட்டதாத்தான் நினைச்சேன். இப்பதான் புரியறது... அதுக்குக் காரணம், ஒரு குழந்தை இல்லையேங்கற ஏக்கம்னு... ஒரு ஆம்பளையா, என்புள்ளை இல்லாம போய்ட்டானோன்னு கூட நீ பயந்திருக்கலாம். அதுதான் வெறுப்பா, ஆங்காரமா உன்கிட்ட வெளிப்பட்டிருக்கு... ஆனா, இனி எல்லாம் சரியாயிடும். கவலைப்படாதே. நாடி ஜோசியன் சொன்ன பரிகாரத்தைத்தான் அவ்வளவு நேர்த்தியா பண்ணிட்டோமே..."- என்று மிகவும் நம்பிக்கையளித்தாள். சாருவுக்கு டாக்டர் சொன்னதைச் சொல்லி விடலாமா என்று கூடத் தோன்றியது. ஆனால் அதற்குள் லைன் கட்டாகிவிட்டது.

வாசலில் கார் வந்து நிற்கும் சப்தம் கேட்கவும் அப்படியே எட்டிப்பார்த்தாள். சம்பத் இறங்கி வந்து கொண்டிருந்தான். அவனிடம் ஒருவித துள்ளல் தெரிந்தது. ப்ரீஃப்கேஸை டேபிள் மேல் வைத்தவன் கழுத்து டையை தளர்த்தியபடியே "என்ன சாரு... நான் உன்னை ரெடியாகுன்னு சொன்னேனே. அப்படியே இருந்தா என்ன அர்த்தம்?"- என்றபடியே சட்டைப் பையில் இருந்த நேம்பேட்ஜ், குவாலிடி பாலிசி பேட்ஜ் என்று சகலத்தையும் எடுத்து மேஜை டிராயரில் போடுவதற்காகத் திறந்தான்.

உள்ளே சாரு அடுக்கியிருந்த மெடிகல் ரிப்போர்ட் ஒரு ஃபைலாகக் கண்ணில் பட்டது. கண்களை இடுக்கிக்கொண்டு கையில் எடுத்தான். அதைப் பார்த்த சாரு வெலவெலத்துப் போய்விட்டாள். பாய்ச்ச





லாக வந்தவள் அதைப் பிடுங்கினாள்

"ஏய்.. என்ன இது... அது மெடிகல் ரிப்போர்ட்தானே?"

"அ...ஆமா... பழசு..."

"ஒரு தடவைதான் உன் கூட நான் வந்தேன். நம்மை செக் பண்ணிட்டு நார்மல்னு சொல்லிட்டா. அப்புறமா நீ கூப்பிட்டு நான் வரலை. நீ மட்டும்தான் போனே... இது அந்த ரிப்போர்ட்தானே?"

"இ... இல்ல.. இது பழசு... இதைப் போய் பார்த்துண்டு..." என்றவள் படபடவென்று அதில் உள்ள காகிதங்களை வெளியில் எடுத்து சுக்குநூறாக கிழித்தாள். ஆனால் சம்பத் முகம் தூக பட்டது போல மாறிவிட்டது. நெற்றியில் மடிப்புகள் விழத் தீவிரமாக அவளைப் பார்த்தான். "இது என்ன பார்வை... நான் இப்ப ஒரு பத்து நிமிஷத்துல ரெடியாயிடுவேன். வெளியே கிளம்புவோம். இப்பதான் அம்மா கயாவுல இருந்து போன் பண்ணினா. பரிகாரமெல்லாம் பண்ணி முடிச்சுட்டாளாம். நிறைய பேசினா... கார்ல போகும்போது சொல்றேன்..."- என்றபடியே உள்ளே ஓடினாள். சம்பத்திடம் மட்டும் 'சம்திங்ராங்' என்கிற முணுமுணுப்பு எழுந்தது.

கேமராவும் கையுமாகச் சுழன்று கொண்டிருந்தாள் அனுராதா. ஒரு பிராட்கேஜ் ரயில்பாதை அகலத்துக்கு தெருக்கள். அதில் அசால்ட்டாக புகுந்து பறக்கும் ஸ்கூட்டர்கள். தடுக்கி விழுந்தால் லஸ்ஸி கடைகள். இல்லாவிட்டால் பான்மசாலா கடைகள். பத்துக்கு எட்டு பேர் வாயில் புகையிலைக் குதப்பல். அனுராதா அனைத்தையும் மனதில் குறித்துக்கொண்டாள். விஸ்வநாதர் ஆல

16

இந்திரா சௌந்தர்ராஜன்

யத்துக்குள் நுழைய முயன்றபோது ஏராள மான போலீஸ்காரர்கள். சிலரிடம் தான் விறைப்புத் தெரிந்தது. பலர் தாயக்கட்டம் ஆடுவதுபோல அமர்ந்திருந்தார்கள். பக்தர்கள் கூட்டத்தை விட அவர்கள் கூட்டம் அதிகமாக இருந்தது. தாண்டிக் கொண்டு உள்ளே சென்றான். கேமராவை ஒரு இடத்தில் தடை செய்தார்கள். 'பிரஸ்' என்று சொல்லி ஹிந்தியிலேயே பேசினான். அதனால் ஒரு பிரயோஜனமும் ஏற்பட வில்லை. கேமரா பையை போலீசிடம் வைத்துவிட்டு புறப்பட இருந்தவனிடம் கைட் என்று சொல்லிக் கொண்டு ஒருவன் வந்து ஒட்டிக் கொண்டான். அவனிடம் கொஞ்சம் மலிவான ஆங்கிலம்.

"மேடம், நீங்க பிரஸ் ரிப்போர்ட்டரா?"

"இல்ல... நான்... நீங்க யார்?"

"நான் ஒரு கைட். இந்த வாரணாசி யையே கரைச்சுக் குடிச்சு வைச்சிருக்கறவன். என்கிட்ட நீங்க எதைவேணா கேட்டுத் தெரிஞ்சுக்கலாம்..."

"உங்க சார்ஜ்?"

"உங்க விருப்பம்போல போட்டுத்தாங்க. ஆனா நான் மினிமம் இருநூறு வாங் கறேன்..."

"ஐ.சி... ஒரு நாளைக்கு எவ்வளவுபேர் உங்ககிட்ட மாட்டுவாங்க..."

"என்ன... ஒரு நாலஞ்சுபேர்..."

"வாவ்... ஒரு நாளைக்கு ஆயிரம் ரூபா சம்பாத்தியம். காசியில ஒரு கைட் வருமா னமே இவ்வளவுன்னா இது லண்டன், பாரீஸ் மாதிரின்னு சொல்லுங்க..."

"அட நீங்க ஒண்ணு... அவ்வளவெல்லாம் வந்தா நான் ஏன் இப்படி அழுக்கு ஜிப்பா வோட அலையறேன்?"

"நீங்கதானே சொன்னீங்க... மினிமம் இருநூறு ரூபா வாங்கறேன்னு..."

"போதும் மேடம்... போட்டு வாங் காதீங்க... நீங்க பத்திரிகைகாரங்கன்றத நல் லாவே காட்டிட்டீங்க... கொடுக்கறத கொடுங்க. வயித்துப்பாடு மேடம்... ப்ளீஸ்..."

அப்படியே பேச்சு புரண்டு, புரண்டு எங்கெங்கோ போனது. இறுதியில் அந்த கைட் அனல் பறக்க பல விஷயங்களைக் கூறி முடித்தான். அவளும் குறித்துக் கொண் டாள். விஸ்வநாதர் தரிசனத்தையும் முடித் தாள்.

சின்ன சன்னதி. கூட்டம் நசுக்கித் தள்ளி யது. சமாளித்து வெளியே வந்தபின் அந்த கைடிடம் ஒரு நூறு ரூபாயைத் தந்தாள்.

அவன் அடுத்த நொடியே, அதில் பத்து ரூபாய்க்கு பான்மசால் வாங்கி போட்டுக் கொண்டு குதப்ப ஆரம்பித்து விட்டான். அப்படியே கங்கைக் கரை வரை சென்ற வள், கற்படிகள் மேல் நின்று நீரோட் டத்தைப் பார்த்தாள். பலமான நீரோட்டம், படகுகளின் சவாரி வேறு... படிகளின் மேல் பிதுர்காரி யங்கள் நடந்து கொண்டிருந்தன. அதை அப்படியே புகைப்படமாக எடுத்துக்கொண்டாள்.

அறைக்குத் திரும்பியபோது சீனுவும் ராஜமும் கயாவில் காரி யத்தை முடித்துக்கொண்டு திரும்பி யிருந்தனர்.

பனை ஓலை விசிறியால் விசிறிக் கொண்டு படுத்திருந்தார் சீனு. அனுராதா வரவும் சங்கோஜத்தோடு எழுந்து அமர்ந்தார். ராஜமும் புன்சிரிப்போடு பார்த்தாள்.

"அவர்..."

"யாரு கணேஷா?"

"ஆங்... சார் எங்க..?"

"எங்களுக்காக டிக்கெட் புக் பண்ண ஜங்ஷன் போயிருக்கிறார்... ஆமா, உன் பேர் என்னம்மா?

"அனுராதாம்மா..."



"புதுசா நாய்க்குட்டி வாங்கினேன்னு தலைவர்கிட்டே சொன்னது, செலவை இழுத்து விட்டுடுச்சு!"

"எப்படி?"

"நான் வந்து பெயர் சூட்டறேன்; விழாவுக்கு ஏற்பாடு பண்ணு'ன்னு சொல்லிட்டாரு!"

- யமுனா ரெங்கநாதன்

"இப்படித் தனியா வந்துருக்கியே... உனக்குப் பயமா இல்லையா?"

"பயந்தா பத்திரிகைத் துறைல இருக்க முடியுமா..."

"நல்ல பொண்ணுதான்... கல்யாணமாயிடுத்தா?"

"இல்ல..."

"சீக்கிரம் கல்யாணமாகட்டும். ஏன்னா... கன்யா பொண்ணா கண்லபட்டிருக்கா. அந்த ரவிக்கைத் துணியை இவளுக்கு வெச்சு கொடுத்துட்றேனே..."

"இதென்ன கேள்வி... அதெல்லாம் உன்பாடு."

"ரவிக்கைத் துணியா... என்னம்மா அது...?"

"இன்னிக்கு வெள்ளிக்கிழமை. குணசீலமா இருந்தா யாராவது ஒரு சுமங்கலிக்கோ இல்ல கன்யா பொண்ணுக்கோ வெத்தல பாக்குல ரவிக்கைத்துணி வெச்சு கொடுக்கறது என் வழக்கம்..."

"ஏன் அப்படி?"

"அதுக்குப் பல அர்த்தம் இருக்கு. சுமங்கலியையும் கன்னியையும் லட்சுமி சொரூபமா பார்த்துச் செய்யற ஒரு மரியாதை அது. கலியுகத்துல பெருமாளும் தாயாரும் நேர்லேயா வருவா... உன்னை மாதிரி யார் மூலமாவது தானே வருவா...?"

– ராஜம் பேசிக் கொண்டே ரவிக்கைத் துணியை வெற்றிலைப் பாக்கோடு வைத்துத் தந்தாள். குங்குமத்தை எடுத்து இட்டுக் கொண்டே அனுராதா பெற்றுக் கொண்டாள்.

**அ**ப்போது கணேஷ்ம் உள்ளே நுழைந்தான்.

"மாமி... டிக்கெட் ரிசர்வ் பண்ணிட்டேன். இன்னும் மூணு மணி நேரத்துல ட்ரெய்ன். அதுக்குள்ள தயாராகிடுங்க. இங்க இருந்து நேரா டெல்லி போய் அங்க இருந்து ஹரித்துவாருக்கு நீங்க மாறணும். பிறகு டெல்லி வந்து தான் சென்னை திரும்பறீங்க" - என்று டிக்கெட்டை நீட்டினான்.

"ரொம்ப சந்தோஷம்ப்பா... எவ்வளவோ நல்ல காரியங்கள் நாங்கள் செய்ய துணையா இருந்துருக்கே... உனக்கு ரொம்ப நன்றி..."

"நன்றியெல்லாம் இருக்கட்டும்... இந்த வாரணாசியில ஏதாவது வாங்க ஆசைப் பட்டா போய் வாங்கிட்டு வந்துடுங்க.

"விளம்பரங்கள்ல நடிச்சு இவ்வளவு சம்பாதிச்சதா இப்ப சொல்ற நீங்க, முதல்லயே இதைச் சொல்லியிருக்கலாமே...?"

"எனக்கு விளம்பரமே பிடிக்காதுங்கிறதால அப்ப சொல்லலை; இது, கோர்ட்டுங்கிறதால நீதிபதிக்கு மரியாதை கொடுக்கணும்னு இப்ப சொல்றேன்!"

– சீர்காழி வி.ரேவதி



அனுமன்காட்ல செட்டியார் கடைன்னு ஒண்ணு உண்டு. அங்க எல்லாமே கிடைக்கும். அப்படியே இந்த ஊர் பனாரஸ் பட்டும் கடைல கிடைக்கும்". எடுத்துக் கொடுத்தான்.

"அதுக்கெல்லாம் டயமிருக்கா?"

"ஏன் இல்லாம... நீங்க இரண்டு பேரும் புறப்படுங்க. நான் ஒரு இரண்டுமணி நேரம் கழிச்சு உங்க லக்கேஜோட ஸ்டேஷனுக்கு வந்துடறேன். நீங்களும் ஆட்டோவுல ஸ்டேஷனுக்கு வந்துடுங்க..."

"ஐயோ வேண்டாம்ப்பா... உனக்கு எதுக்குச் சிரமம்?"

"ஒரு சிரமமும் இல்லை. நீங்க புறப்படுங்க" - என்றான்.

"உங்களுக்கு ஆட்சேபணை இல்லேன்னா நானும் வரேன். என் கவரேஜ்ல செட்டியார் கடையும் இருக்கு" - என்று அனுராதாவும் தொற்றிக் கொண்டாள்.

சீனு அரை மனதாக தன் லக்கேஜ் அவ்வளவையும் திரும்பித் திரும்பிப் பார்த்தபடியே கிளம்பினார். எல்லாம் கட்டித் தயாராக இருந்தது. முக்கியமாக கிருஷ்ணன் தூங்கும் அந்தப் பிரம்புக் கூடை!

(தொடரும்)

● லலிதா செல்லப்பா, சென்னை - 75

? வெள்ள நிவாரணம் பெற வந்தவர்களுக்குப் பரிசாகக் கிடைத்த மரணத்துக்கு யார் பொறுப்பு?

! மக்களின் இலவச மோகம் 10 சதவிகிதம் பொறுப்பு. சோக மான முன்னுதாரணங்கள் பல இருந்தும்கூட, அந்தச் சோகத்தைத் தாண்டியதும் அல்லாமல் போதிய பாதுகாப்பு, முன்னெச்சரிக்கை நடவடிக்கைகளை மேற்கொள்ளாத தமிழக அரசு 90 சதவிகிதம் பொறுப்பு.



● பி.ஜெயப்பிரகாஷ், சர்க்கார்பதி

? விடைத்தாள் மோசடியில் சிக்கிய நாற்பது மாணவர்களை அண்ணா பல்கலைக்கழகம் இரண்டு ஆண்டுகளுக்கு சஸ்பெண்ட் செய்துள்ளது பற்றி...?

! இரண்டாண்டுகள் மட்டும் அல்ல... கரும்புள்ளி ஆயுக்கும் தொடரும். ஆனால், விடைத்தாள் மோசடியில் மாணவர்களுக்கு உதவிய பல்கலைக் கழக ஊழியர்கள் கோர்ட்டில் ஆஜராகி கடும் தண்டனை பெறும்போதுதான் உண்மையில் நீதி நிலைத்ததாகும்.

● ஆழம் தெரியாமல்...

அவற்றுக்கு 'ஏ' அல்லது 'யு' சான்றிதழ் வழங்க வேண்டும் என்று சுப்ரீம் கோர்ட்டில் பொதுநல மனு தாக்கலாகியுள்ளதே... இனியேனும் பத்திரிகைகள் பொறுப்போடு நடந்துகொள்ளுமா...?

! ஜனநாயகத்தில் பத்திரிகை சுதந்திரம் என்பது மிக முக்கியமானது; விலை மதிக்க முடியாதது. வியாபார நோக்கு பிரதானமாகி விட்டால், தரக்குறைவு புகுந்து அந்தச் சுதந்திரத்தை மாசுபடுத்துகிறது. பத்திரிகைகள் பொறுப்புணர்வுடன் தங்கள் சுதந்திரத்தைப் பயன்படுத்தாவிட்டால், அந்தச் சுதந்திரம் கட்டுப்படுத்தப்படும் அபாயம் எப்போதும் உண்டு.

● மல்லிகை மன்னன், மதுரை

? தி.மு.க. மீண்டும் ஆட்சிக்கு வந்தால், சுயமரியாதை திருமணம் செய்து கொள்வோருக்கு பத்தாயிரம் ரூபாய் பரிசு என்கிறாரே கருணாநிதி?

! கட்சியின் தனிப்பட்ட கொள்கை அல்லது பார்வை - அரசுக்கு ஏற்படுத்தும் செலவாக அமையும். பொதுமக்களின் பரவலான ஆதரவு இதற்குக் கிடைக்காது.



● பேசப் படாமல்..



# தீபாவளி படங்களில்

● த.சத்தியநாராயணன், சென்னை - 38

? ஆழம் தெரியாமல் காலை விடுபவர் என்று தற்போது யாரைக் கூறலாம்...?

! சலுகைகள், மானியங்கள், இலவசங்கள் என்று ஏராளமாக அறிவித்து வரும் முதல்வரே முதலில் நினைவுக்கு வருகிறார்.

● வைகை வளவன், மதுரை - 17

? ஆபாசத்தை மூலதனமாக வைத்துப் பணம் சம்பாதிக்க நினைக்கும் பத்திரிகைகளின் முகமூடியைக் கிழித்தெறிய,

புதிதாக 10 - 5 = 5 கோடி மூலதனத்துடன் உருவாகியுள்ள (தயாளு) கருணாநிதி அறக்கட்டளையிலிருந்து இந்தப் பரிசை வழங்கலாம்.

● வளர்மதி ஆசைத்தம்பி, தஞ்சாவூர்

? செல்ஃபோன் வைத்துள்ள மாணவனின் தந்தை வருமானவரி ரிட்டர்ன்ஸ் சமர்ப்பிக்க வேண்டும் என்று நிதியமைச்சர் ப.சிதம்பரம் கூறியிருப்பது பற்றி...?

! நியாயமாக வரி செலுத்தாமல் ஏய்ப்பவர்கள் நம் நாட்டில் மிகுதி. செல்ஃபோன் - வாகனம் போன்றவை வைத்திருப்போர் 'ரிட்டர்ன்' சமர்ப்பிக்க வேண்டும் என்னும்போது, அவ்வாறு செய்யத் தவறியவர்கள் யார் யார் என்பதை அரசு எளிதில் கண்டுபிடிக்க முடியும். "அப்போது நாம் மாட்டிக் கொள்வோம்" என்கிற பயத்தில் இப்போது பலர் ரிட்டர்ன் சமர்ப்பிப்பார்கள். அரசுக்கு வரி வருவாய் அதிகரிக்கிறது. வருமான வரி ரிட்டர்ன் சமர்ப்பிக்கும் அனைவருமே வரி செலுத்த வேண்டிய கட்டாயமில்லை. Nil return தரலாம்.

● **யமுனா ரெங்கநாதன், பெங்களூர்**

***? தனிமனித ஒழுக்க குணங்கள் இல்லாதவர்கள் தலைமைப் பதவிகளில் இருப்பது ஜனநாயகத்தின் பலவீனம் தானே...?***

! வாக்காளர்களின் பலவீனம்!

● **பி.பாலாஜி கணேஷ், கோவிலாம் பூண்டி**

***? தீபாவளி படங்களில் உருப்படியானது ஏதேனும் உண்டா?***

! ஓ! 'பெருசு' என்று ஒரு படம். மிகக் குறைந்த செலவில் யதார்த்தமாக ஒரு சினிமா. அயோத்யா குப்பம் வீரமணியின் வாழ்க்கையில் கேண்டிட் கேமரா புகுந்துவிட்டதைப் போல காட்சிகள், கதையமைப்பு... எல்லோரும் புதுமுகங்கள் என்பதால் கடைசிவரை படத்தை ரசிக்க முடிகிறது. ஒரு பேட்டை தாதாவின் கதையை, ஒரு பத்திரிகை நிருபரின் ஃப்ளாஷ்பேக்கில் சொன்ன விதம் அபாரம். ஆர்ப்பாட்டமில்லாத அசத்தல் படம் 'பெருசு'... பெரிசாக ஓடவில்லை; பெரிசாகப் பேசப்படவுமில்லை என்பதுதான் குறை.



# உருப்படியானது...

● **ரொசாரியோ ரவிச்சந்திரன், சென்னை - 59**

***? பூகம்பப் பிடியில் சிக்கித் தவிக்கும் மக்களுக்கு உதவக்கூட இந்திய ராணுவத்தினரை அனுமதிக்காத முஷாரஃப், எல்லைக் கோட்டில் உள்ள படையினரை விலக்கிக் கொள்ள வேண்டும் என்று கேட்டுக் கொண்டுள்ளாரே...?***

! "அப்பன் குதிருக்குள் இல்லை" என்று கூறி வருகிறார்

முஷாரஃப். இந்திய ராணுவம் அனுமதிக்கப்பட்டால், அவர் பேசுவது பொய் என்று நிரூபிக்கப்பட்டுவிடும். எல்லைக் கோட்டில் படையினரை விலக்கிக் கொள்ள அவர் கோருவதோ பயங்கரவாதிகள் இங்கே எளிதில் ஊடுருவ வசதி பண்ணத்தான். இந்த அரசியல் நாடகங்களுக்கிடையில் எல்லைக்கோடு திறக்கப்பட்டு, பொதுமக்கள் இருபுறமும் சென்று வருவது மகிழ்ச்சி அளிக்கிறது.



* ஆதரவு பெறாமல்...

* தப்ப விடாமல்...

● **எம்.சம்பத், வேலாயுதம்பாளையம்**

**? பள்ளிப் பாடப் புத்தகங்களில் மதப் பிரசாரங்கள் செய்வதைத் தடுக்கும் வகையில் மத்திய அரசு பாட புத்தக கவுன்சில் அமைக்கப் போகிறதாமே...?**

! 1. காங்கிரஸும் பா.ஜ.க.வும் மாறி மாறி ஆட்சிக்கு வரும்போதெல்லாம் பாடப் புத்தக கவுன்சில் மாற்றி அமைக்கப்படுவதைத் தவிர்க்க வேண்டும். 2. பாடப்புத்தக கவுன்சிலில் அரசியல்வாதிகள், மதச் சார்புள்ளவர்கள் இடம்பெறக் கூடாது. இந்த இரண்டையும் செய்தால் பாடப் புத்தகங்களில் இந்தியாவிலுள்ள அனைத்து மதங்களைப் பற்றிய அறிமுகக் குறிப்பும் அவை அனைத்தும் அன்பு மார்க்கத்தையே போதிக்கின்றன என்கிற உண்மையும் பதிவு செய்யப்படும். மாணவர்களின் உள்ளம் பண்படும்.

● **எஸ்.சுவாமிநாதன், மன்னார்குடி**

**? அன்பினாலும் வெல்ல முடியாதது எது...?**

! ஆட்டோக்காரர்களின் பேராசைதான். இல்லாவிட்டால், கொட்டுகிற மழையில் மக்கள் ஏற்கெனவே அவதிப்பட்டுக் கொண்டிருக்க, மயிலாப்பூரிலிருந்து திருவான்மியூர் போக விமான கட்டணம் ரேஞ்சுக்கு வசூல் செய்வார்களா!

● **நெ.பிரஜோற்பத்திகலை, பெருமாத்தூர் ★**

**? நீங்கள் இயற்பியல் தராசா? மளிகைக் கடை தராசா? சேட்டுக் கடை தராசா...? சொல்லு ராசா, (நெஞ்சைத் தொட்டு)...?**

! நியாயத் தராசு!

● **பாக்கியலட்சுமி வெங்கடேஸ்வரன், பள்ளிப்புரம் கிராமம், பாலக்காடு ❒**

**? சென்னை போன்ற நகரங்களில் மழை நீரை வெளியேற்றுவதில் இன்னும் முன்னேற்றம் இல்லையே...?**

! கடமை மறந்ததால் ஏரி - குளங்கள் பரப்பளவில் குறைந்தன. வடிகால்கள் தூர்ந்து போயின. கரைகள் பலவீனமடைந்தன. லஞ்ச ஊழல் காரணமாக இவற்றில் நில ஆக்கிரமிப்பும் அனுமதிக்கப்பட்டது. அரசியல்வாதிகள் - அதிகாரிகளின் இந்த இரட்டை குணக்கேடுகளின் பயனைத்தான் சென்னைவாசிகள் இன்று அனுபவித்து வருகிறார்கள்.

● **அ.அப்துல் காதர், விளாத்திகுளம்**

**? அரசியல்வாதிகள் அனைவருமே அடுத்த தேர்தலைப் பற்றியே சிந்திக்கிறார்களேயொழிய யாரும் அடுத்த தலைமுறையைப் பற்றிச் சிந்திப்பதாகத் தெரியவில்லையே...?**

! என்ன அப்படி சொல்லிப்புட்டீங்க... அடுத்த தலைமுறையைப் பற்றிச் சிந்திக்காமலா வாரிசுகளை உருவாக்குகிறார்கள்!

● **ச.குமரன், தூசி அஞ்சல்**

**? நூல் அறிவு - அனுபவ அறிவு - இரண்டில் எது சிறந்தது...?**

! நூல் அறிவைப் பயனுள்ள வகையில் செயல்படுத்தும் அனுபவ அறிவு.

❒ ரூ.100 பரிசு பெறுபவர் :
**பாக்கியலட்சுமி வெங்கடேஸ்வரன்,**
**27/644, பள்ளிப்புரம் கிராமம்,**
**பாலக்காடு - 678 006**

★ ரூ.50 பரிசு பெறுபவர் :
**நெ. பிரஜோற்பத்தி கலை,**
**த/பெ ம.நெப்போலியன்,**
35, மாரியம்மன் கோயில் தெரு,
பெருமாத்தூர், புவனகிரி - 608 601

# நந்தம்பாக்கத்தில் நாலுபேர் கூட்டணி!



இருங்க, இருங்க. இது ஏதோ அரசியல் சமாசாரம்னு பக்கத்தைத் தள்ளிடாதீங்க.

இந்தியாவிலே இருக்கிற நாலு பெரிய கண் மருத்துவமனைகளும் ஒண்ணா கூட்டணி சேர்ந்து, சென்னையிலே இந்த மாசம் 19-ம் தேதியும் 20-ஆம்



• டாக்டர் பத்ரிநாத்

தேதியும் கண்புரை - அதாங்க காடராக்ட், டயபடிக் ரெடினோபதி - நீரிழிவு நோய் காரணமா விழி பாதிக்கப்படுது இல்லையா, அதேதான் - அப்புறம் வயசு காரணமா வர்ற கண் பார்வை இழப்பு இதையெல்லாம் பத்தி அலசு அலசுன்னு அலசப் போறாங்க.

கூட்டணிக்கார மருத்துவமனைகள் எதுஎதுன்னு தெரியுமா?

சங்கர நேத்ராலயா, சென்னை; அரவிந்த் கண் மருத்துவமனை, மதுரை; எல்விபிரசாத் கண் மருத்துவமனை, ஹைதராபாத்; ஸ்ரீகணபதி நேத்ராலயா, ஜல்னா.

இதுல புதுசா என்ன விஷயம் பேசப் போறாங்களாம் தெரியுமா?

இஸ்ரேல்ல இருந்து ஒரு டஜன் கண் டாக்டருங்க வராங்க. டாக்டர் மைக்கேல் ப்ளூமென்தால்னு பெரிய, கெட்டிக்கார கண் டாக்டர் வந்து, தான் கண்டுபிடிச்சிருக்கிற புது மாதிரி காடராக்ட ஆபரேஷன் பத்தி விளக்கப் போறார். இந்த உத்திக்கு ஸ்மால் இன்஢ஸிஷன் காடராக்ட் சர்ஜரின்னு பேராம். இதை எப்படிச் செய்யறதுன்னு கண் டாக்டருங்களுக்குப் பயிற்சி கொடுக்கப் போறாங்களாம். ஏன்னா மொத்த மக்கள் தொகைல, 44 சதவிகிதம் கண் பார்வை போகக் காரணம் காடராக்ட்தானாம்!

அதே மாதிரி டயபடிக் ரெடினோபதினால பாதிக்கப்படப்போறவங்க எண்ணிக்கை கன்னாபின்னான்னு எகிறப் போகுதாம். அதுனால டயபடீஸ் உள்ளவங்க சாக்கிரதையா இருக்கணும். இல்லே, ஆபத்துதான்!

இன்னொண்ணு, வயசான காலத்துல (65 வயசுக்கு மேல) வர்ற பார்வை இழப்பு. இதுக்கும் புது உத்தி ஒண்ணு கண்டுபிடிச்சிருக்காங்க. இதுக்குப் பேரு போட்டோ-டைனமிக் தெரபி.

ஆமா, 'க்ளகோமா'ங்கறாங்களே, அது பத்தி ஒண்ணும் பேச மாட்டாங்களான்னு கேக்கறியளா?

அது எப்படிங்க, 'க்ளகோமா பத்திப் பேசாம இருந்துட முடியுமா? இதுலயும் புதுப் புது உத்தி கண்டுபிடிச்சிருக்காங்க. புதுப் புது மருந்துகளும் வந்துட்டுது. இதை எல்லாம் பத்தியும் வெலாவாரியா விளக்கப் போறாங்க.

ஒட்டுமொத்த சமுதாய கண் பாது காப்புப் பத்தியும் முக்கியமா பேசப் போறாங்க. இஸ்ரேல் டாக்டருங்க வரது இருக்கட்டும். 'இஸ்ரோ'ன்னு சொல்றாங்களே விண்வெளி ஆராய்ச்சி நிலையம்? அவங்களோட உதவியோட சங்கர நேத்ராலயா இது வரை 450 கண் மருத்துவ சிகிச்சை முகாம் நடத்தி 32,000 பேருக்கு ஆபரேஷன் பண்ணியிருக்காங்க. இதை 'டெலி-ஆப்தால்மாலஜி'ன்னு சொல்றாங்க. இதுதான் கிராமத்துல இருக்கறவங்களுக்கு ரொம்ப உபயோகமாயிருந்திருக்காம்!

டாக்டர் பத்ரிநாத் ஏற்பாடு பண்ணியிருக்கார்ன்னா, பக்காவாத்தானே இருக்கும் எல்லாமே?

கண் டாக்டருங்க எல்லாருமே கட்டாயம் கலந்துக்க வேண்டியதுங்க. அவங்க கத்துக்கிட்டாத்தானே நம்ம கண்ணைக் காப்பாத்தலாம்?

**- சாருகேசி**

# இளமை கல்கி

அம்மணிக்குட்டி அம்மா சம்பந்தி (ஒரு பதார்த்தம்) செய்ய நினைக்கிறா. அஞ்சரைப் பெட்டியில கையை விடுறப்போ, ஒரே ஒரு குறுமிளகுதான் இருக்குது. அதுவும் அம்மியில வெச்சதும், உருண்டு கீழே விழுந்துடுது. அப்புறம் அம்மணிக்குட்டிக்கு 'பெப்பெப்பெ' காட்டிட்டு தப்பிச்சு ஓட ஆரம்பிக்குது குறுமிளகு! அம்மணிக்குட்டி அதைத் துரத்த... மிளகு ஓட.... செம அட்வெஞ்சரா போகுது கதை!

## மிளகு வாங்கிய

'The Runaway Peppercorn' இதுதான் இந்தக் குட்டிக் கதையோட பெயர். எழுதியது ரேடியோ மிர்ச்சி சுசித்ரா. ஆங்கிலத்தில் அவர் எழுதிய இந்தக் கதை இப்போ கலர்ஃபுல் கார்ட்டூன்ஸோட, குண்டு குண்டு எழுத்துகளோட, தமிழ், ஆங்கிலம், கன்னடம், தெலுங்கு, ஹிந்தி, மராத்தி, குஜராத்தின்னு ஏழு மொழிகளில் புத்தகமா வெளிவந்திருக்கு!

இந்தக் கதை, 2003-ல் காமன்வெல்த் பிராட்காஸ்டிங் அசோசியேஷன் வழங்கும் சிறுகதை விருதை வாங்கியிருக்கு.

'எப்படி இந்தக் கதையோட 'தீம்' கிடைச்சது?' என்றோம் சுச்சியிடம்!

"என்னோட பாட்டி, குழந்தைகளுக்கு

ஆபர்ன் ஹில்ஸ் பகுதியில் வசிக்கும் 26 வயதான பெண் ஒருவர், புத்தகத்தில் தான் உறங்குவார், புத்தகத்தில் தான் கண் விழிப்பார். ஆனால் பாருங்க, விதி யாரை விட்டது? கவிதைப் புத்தகங்களின் காற்று இவர் மீது மிகுதியாக வீசியதாலோ என்னவோ, நல்ல பிள்ளையாக இருந்த இவருக்கு, ஒரு நாள் மெலிசா என்னும் இளம் பெண்ணின் மீது புவியீர்ப்பு விசை ஏற்பட்டது.

எத்தனை புத்தகங்களை படித்துத் தான் என்ன பயன்? விறுவிறுவென்று நடந்து போய் 'மெலிசா எனக்கு உன்னைப் பிடிச்சருக்கு' என்று சொல்ல முடிகிறதா? ம்ஹூம்... என்ன செய்வது, எப்படிச் சொல்வது என்று யோசித்துக் குழம்பிக் கொண்டிருந்த பெண்ணுக்கு, இறுதியில் கைகொடுத்தவர் பால் மெக்கார்ட்னி எனும் பிரபல இசையமைப்பாளர்.

டெட்ராய்ட்டில் நடந்த இவரது கச்சேரிக்கு மெலிசாவை அழைத்துச் சென்றார் பெண். கச்சேரி முடியும் தருவாயில் பெண்



நிறைய கதை சொல்லுவாங்க. அப்ப நல்லதைக் கொஞ்சம் பயம் கலந்து சொன்னாத்தான் குழந்தைகள் மனகல பதியும்னு. 'அம்மியில மிளகு வெச்சு அரைக்கறப்போ, அது கீழே விழுந்து சிதறாம அரைக்கணும், இல்லாட்டி அது பக்கத்து வீட்டுல போய் உன்னைப் பத்தி கோள் மூட்டிவிடும்'னு சொன்னாங்க. அய்யோ பாவம்... குட்டி மிளகுக்கு இவ்வளவு பெரிய தண்டனையான்னு யோசிச்சப்போ கிடைச்ச தீம்தான் இது!''

என்ற சுசித்ரா, 2005-லும் 'சின்னா' என்ற 'மிருகபலி' பற்றிய சிறுகதைக்காக அதே விருதை மீண்டும் பெற்றுள்ளார்.

'' 'சிறு மிளகும் அவார்டு வாங்க உதவும்!'னு புதுமொழி கண்டுபிடிச்சிருக் கீங்க! வாழ்த்துக்கள் + கல்யாண வாழ்த் துகள்!''னு சொன்னபோது சுசித்ரா உதிர்த்தார் தன் வழக்கமான மிர்ச்சி (மிளகு) புன்னகையை!

- முகில்

# விருது!




# எல்லோரும் முட்டி போடுங்க!

திடீரென்று ஒரு பலகையை உயர்த்திக் காட்டினார். 'என் பெயர் பென். நான் மெலிசா எனும் பெண்ணைக் காதலிக் கிறேன். அவளிடம் என் காதலை அறிவிக்க லாமா?'

பால் மெக்கார்ட்னி இந்த வாசகத்தைப் படித்துவிட்டு, மைக்கைப் பிடித்து 'இங் குள்ள பென் எனும் ஆசாமி இனித் தன் காதலை தெரியப்படுத்தலாம்' என்று முழங்க, பென் மேடையேறினார். 'போ, போய் உன்னோட ஆள் முன்னாடி முட்டி போட்டு ப்ரொபோஸ் பண்ணு' என்று பால் அறிவித்ததும், தன் இரு கைகளால் முகத்தை மறைத்துக் கொண்டு மிக அழகாக வெட் கப்பட்டுக் கொண்டிருந்த மெலிசாவின் முன்னால் மண்டியிட்டார் பென்... பிறகு...

இப்பொழுதெல்லாம் பென் புத்தகங்கள் வாசிக்கிறாரா, குறிப் பாகக் கவிதைகள் வாசிக்கிறாரா என்று தெரியவில்லை. ஆனால், அடிக்கடி வீட்டில் முட்டி போடுகிறாராம்.

- மருதன்

இளமை கல்கி

பழமொழி என்று யாராவது வாயைத் திறந்தால் "போ பெரிசு, இதெல்லாம் கிழ மொழி" என்று ஒதுங்கி விடுகிறார்கள், இன்றைய இளைஞர்கள். விடுவாரா இளசுகளை கிச்சுகிச்சு மூட்டிக் கவர்ந்திழுக்கும் கிரேஸி மோகன்? தம் பாணியில் இளமொழிகளை எழுதித் தள்ளிவிட்டார்.

* கெட்ட பழக்கத்தை நாம் விடலாம்; பாழாய்ப்போன நல்ல பழக்கம் நம்மை விட்டால்தான் உண்டு.
* அளவுக்கு அதிகமாக ஆப்பிளைச் சாப்பிட்டதால், ஆதாம், ஏவாளுக்கு வந்த அஜீரணமே காதல்.
* பகைச்சுவை இல்லாத எதுவுமே நகைச்சுவைதான்.
* சொரிவதற்கு தம்பியுடையான், படைக்கு அஞ்சான்.
* தானாய் வருவது வெற்றி. முயன்று பெறுவது தோல்வி.
* ஐந்து பெண்ணைப் பெற்றவன் ஆண்டியாகலாம். ஐந்து பிள்ளையைப் பெற்றவன் அந்த போண்டிக்கு சம்பந்தியாகி 'ஆண்டி'யாகலாம்.
* மௌனம் சங்கடத்துக்கும் அடையாளம்.
* அடிக்கடி கசக்கி கந்தையாக்காதே.
* இளமையில் கல்; முதுமையில் சிலை. நடுத்தர வயதில் நாராசமான உளியின் ஓசை.
* முக்கால்வாசி வெற்றி, மயிரிழையில் தோல்வியிடமிருந்து தப்புவதுதான்.
* ஞானப்பசி வந்தால், பற்றும் பறந்து போகும்.
* இடுக்கண் வருங்கால் நகர்க

தொகுப்பு : பப்பி

# பழமொழி அல்ல இளமொழி!

—கிரேஸி மோகன்



அப்பாடா, அகடமி தேர்தல் முடிஞ்சுது! 'ஹிந்து முரளி' தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

பீகார் தேர்தல்கூட இவ்வளவு பரபரப்பாக இருந்திருக்காதோ என்று தோன்றுகிறது. CRPF வராத குறையை, சுமார் 90 உள்ளூர் போலீஸ்காரர்கள் வந்து தீர்த்து வைத்துவிட்டார்கள்.

கொட்டுகிற மழையிலும் மியூசிக் அகடமி உறுப்பினர்கள் வந்து வோட்டுப் போடுவதற்கு வசதியாக, மினி ஹால், வாசலில் இம்போர்ட்டட் ஷாமியானா. வசதியாக மட்டுமல்ல, வண்ணமயமாகவும் இருந்தது. ஒரு சொட்டுத் தண்ணீர்கூட உள்ளே விழவில்லை.

மழையும் இடநெருக்கடியும், எல்லா நிர்வாகிகளையும் தேர்ந்தெடுக்க வோட்டுப்போட வேண்டியிருந்ததால் கூடுதலான நேரமும் ஆனது. சென்னை நகரப் பிரமுகர்கள் - அசோக் லேலண்ட் சேஷசாயி, இந்தியா சிமெண்ட்ஸ் சபாரத்தினம் உட்பட - க்யூவில் பொறுமையாகக் காத்திருந்தது அவர்கள் அக்கறையைக் காண்பித்தது. வீல் சேர்களில் வந்தவர்களும் ஒரு டஜன் இருக்கலாம். 93 வயது தொழிலதிபர் கே.எஸ். நாராயணன்கூட வந்து வோட்டுப் போட்டார்.

அசம்பாவிதம் ஏதும் நடந்துவிடுமோ என்று எதிர்பார்த்து, ஆறேழு வீடியோ காமிராக்கள்மூலம் எல்லாவற்றையும் சுழன்று சுழன்று படம் பிடித்துக் கொண்டிருந்தார்கள்.

# இசைபட வாழ்க!

"அதிகபட்ச பப்ளிசிடிதான் எதிர் அணியினரின் ஒட்டுமொத்தத் தோல்விக்குக் காரணம். அதிலும் அவதூறு மட்டுமல்லாமல் ஆபாசமாகவும் இருந்த ஒரு துண்டுப் பிரசுரம், அவர்களுக்கு வோட்டுப் போட வேண்டும் என்று நினைத்திருந்தவர்களைக் கூட மனம் மாறச் செய்துவிட்டது!" என்றார் வோட்டுப் போட்டுவிட்டு வந்த உறுப்பினர் ஒருவர்.

"உறுப்பினர்களுக்கு டிசம்பர் கச்சேரிகள் ஒழுங்காக நடைபெற வேண்டும். அதற்கு மேல் எதுவும் வேண்டாம். இன்னும் சீசனுக்கு இரண்டு மாதம்கூட இல்லாதபோது, புதியவர்கள் வந்து ஒழுங்காக நடத்த முடியாது. அனுபவசாலிகளே தேவலாம் என்று உறுப்பினர்கள் முடிவு எடுத்திருக்கலாம்!" என்றார் ஒருவர்.

"'நல்லி' குழுவினருக்கு 230 வோட்டுகள் கிடைத்தன. இது ஒன்றும் குறைவானதல்ல' என்றார் ஒரு பெண்மணி.

"இதுவரை கோர்ட் கேசுகளில் செலவான காலம் போகட்டும். இனி நிர்வாகத்தை முடுக்கிவிட்டு, எண்டோமெண்ட் நிகழ்ச்சிகள் நடத்தி, ஜர்னலை வெளியிட்டு, ஆராய்ச்சிப் பணிகளில் கவனம் செலுத்துவோம்!" என்கிறார் வெங்கட்ராமன்.

"அகடமியின் கடந்த காலப் பாரம்பரியப் புகழை மறுபடி நிலை நிறுத்தி, முன்னேற்ற, எல்லா முயற்சிகளும் மேற்கொள்வோம். இப்போது டெக்னாலஜி, மாடர்னைசேஷன் வசதிகள் இருப்பதால், அகடமியின் மேம்பாட்டில் கவனம் செலுத்த முடியும். உறுப்பினர்கள் மட்டுமல்ல, பொதுமக்களின் எதிர்பார்ப்பையும் முழுமையாக நிறைவு செய்வோம்!" என்கிறார் 'ஹிந்து' முரளி.

- சாருகேசி



• 'ஹிந்து' முரளி

சங்கீத வித்வத் சபை
THE MUSIC ACADEMY
T T KRISHNAMACHARI AUDITORIUM



# சிவகாசி

விஜய்யின் சினிமா ஃபார்முலா என்னவாக இருக்க முடியும்? நூலிழையில் தொங்கிக் கொண்டிருக்கும் சென்டிமெண்ட் முடிச்சுக்குள், ஆச்சி - சக்தி மசாலா வகையறாக்களை எவ்வளவு சேர்க்க முடியுமோ அவ்வளவையும் சேர்த்துவிட வேண்டும். இரும்பு ஷட்டரைக் கிழித்துக்(!) கொண்டு ஓவர் பில்டப்பில் விஜய் அறிமுகமாகும்போதே இது தெரிந்து விடுகிறது.

தயாரிப்பாளர், ஃபைனான்சியர், சென்சார் போர்டு உறுப்பினர்கள் தவிர படத்துக்குத் தொடர்புடைய பலரும் ஒரு ஸீனிலாவது தலைகாட்டிவிடுகின்றனர். அதிலும் விஜய்யின் ஃபில்மோக்ராபியைக் கூறிக் கொண்டே இயக்குனர் பேரரசு வரும் ஸீன், விஜய்யை விடவும் செம பில்ட்-அப்.

மீசை முளைக்காத வயதில், தன் அண்ணனின் சிறுபிள்ளைத்தனத்தால் விஜய் பழிச்சொல்லுக்கு ஆளாகி, ஊரைவிட்டு ஓடிவந்து, சென்னையில் தன்னை அனாதையாகக் காட்டிக் கொள்கிறார். வழக்கம்போல பணக்கார அஸின் மீது காதல் ஜுரம் கொள்கிறார். ஒரு நாள் அஸின், விஜயின் குடும்பத்தைப் பற்றி டோஸ் விட, அப்பொழுதுதான் குடும்பத்தின் அருமை புரிகிறது. ஊரில் பெற்ற தாயும் தங்கையும் அண்ணன் பிரகாஷ்ராஜால் ஒதுக்கி வைக்கப்பட்டு, பரிதாபமான நிலையில் இருக்கின்றனர். அதைக் காணும் சிவகாசியின் திரி பற்றிக் கொள்கிறது.

முதல்பாதி கடமைக்கு நகர்கிறது. இரண்டாம் பாதியிலிருந்துதான் கதையை சாரட் வண்டியில் பூட்டி 'ஜிவ்'வென்று பறக்க வைக்கிறார் இயக்குனர்.

பிரகாஷ்ராஜுக்கு வழக்கமான 'ஹேய்...' என்று உதார் விடும் கேரக்டர்தான். ஆனால் விஜய் - பிரகாஷ்ராஜ் மோதல்களில் நகைச்சுவை தடவியிருப்பதால், இடைவேளைக்குப் பிறகு தியேட்டர் அதகளமாகிறது.

அஸின் கவர்ச்சியாக உடையணிந்ததைக் கண்டு விஜய் ஆவேசமாகப் பேசும் வசனங்கள் ஆபாசம். அந்தக் காட்சியைத் தவிர மற்ற எந்த இடத்திலும் அருவருக்கத் தக்க ஆபாசமான காட்சிகள் இல்லாதது ஆறுதல்.

மசாலா படத்துக்கேற்ற பாடல்கள், சினிமாத்தனத்தையும் மீறிய சண்டைக் காட்சிகள்.

படத்தில் பேசுபவர்கள் எல்லாம் நம் காதைக் கிழித்துவிட்டுத்தான் மறுவேலை என்று எண்ணி, ஹை டெஸிபலில் உறுமுகிறார்கள்.

எம்.ஜி.ஆர். - ரஜினி நடித்து வந்த கதையில் விஜய்யை அட்டகாசமாக அமர்த்தியிருந்தாலும், இது போன்ற மாஸ் படங்களால் தமிழ் சினிமாவையும், ரசிகனின் ரசனையையும் உயரத்துக்குக் கொண்டு செல்ல முடியுமா என்பது கேள்விக்குறிதான்.

**- லஜ்ஜாவதி**

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / PMG (CCR) 572 / 03 - 05 *
Licensed to post without prepayment under PMG's Licence No. WPP 358 / 03 - 05 * Registered as a Newspaper in Srilanka









